இடைத்தேர்தல்
— நேரடி ரிப்போர்ட்

# கல்கி

KALKI
12.3.89
ரு. 2.

## பாக்யராஜ் பேட்டி:

புதுக் கட்சி
சாதிக்கப்போவது
என்ன?

இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில்

*International*

# LUX



"உலகிலே பெரிதும் விரும்பப்படும் மேனியெழில் பராமரிப்பு சோப்புதான் எனக்கு ஏற்றது."



செழுமையான, செறிவான நுரைதரும் மேனியெழில் பராமரிப்பு; நீங்காத நறுமணம். இரண்டும் ஒருங்கே அமைந்த ஒரே சோப்: இன்டர்நேஷனல் லக்ஸ்.

உலகிலே 70 நாடுகளில் சினிமா நட்சத்திரங்கள் இதையே பெரிதும் விரும்புவதில் வியப்பென்ன!

இப்போது, இந்த சர்வ தேச விருப்பத்தை நீங்களும் முயன்று பார்க்கலாம். இதோ, இந்தியாவிலேயே.




HTA 2881

**உலகெங்கும் சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமிக்க தயாரிப்பு

* எஸ். ஆர். ராதா

# இரட்டை இலை கிடைத்தது; வெற்றி கிடைக்குமா...?

## —இடைத்தேர்தல் நேரடி ரிப்போர்ட்

**பிப்ரவரி கடைசி வாரம். தேர்தலுக்கு இன்னும் பத்துப் பன்னிரண்டு நாட்களே உள்ள நிலையிலும் மதுரையிலும் மருங்காபுரியிலும் தேர்தல் பிரசாரம் சூடு பிடிக்கவில்லை. மக்கள் மத்தியில் தேர்தல் பற்றிய எந்தப் பரபரப்பும் இல்லை. அரசியல் கட்சிகள் மட்டுமே தேர்தலில் ஆர்வம் காட்டின... அதிலும் கூட 'ஸ்டார்ட்டிங் டிரபிள்!'**

பொதுவாகவே இடைத் தேர்தல்களுக்கு அரசியல்ரீதியாக அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. ஆட்சியில் உள்ள கட்சி பற்றி மக்கள் தீர்ப்பு எப்படியிருக்கிறது என்று நடுவே ஒரு முறை அறிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பாக இடைத் தேர்தல்கள் அமைகின்றன என்று கருதப்படுவதே இதற்குக் காரணம்.

ஆனால் மதுரை கிழக்குத் தொகுதியிலும், திருச்சி மாவட்டத்து மருங்காபுரி தொகுதியிலும் மார்ச் 11—ந்தேதி நடக்கவிருக்கும் இடைத் தேர்தல்கள் அப்படிப் பட்டவை அல்ல. பொதுத் தேர்தல் முடிந்து ஆட்சி அமைந்த் ஒன்றரை மாதத்துக்குள்ளேயே இவை நடைபெறுகின்றன.

எனவே நடைபெறும் ஆட்சி மீது மக்களுக்கு உள்ள திருப்தியையோ அல்லது அதிருப்தியையோ உணர்த்துவதாகக் கொள்ள முடியாது.

மதுரை கிழக்குத் தொகுதியில் சுமார் 1 லட்சத்து 26 ஆயிரம் வாக்காளர்கள் இருக்கிறார்கள். தி.மு.க—மார்க்சிஸ்ட் கட்சி கூட்டணியின் வேட்பாளரான மார்க்சிஸ்ட் தலைவர் சங்கரய்யாவுக்கு ஒரு கூடுதல் வசதி. ஜனவரி 21இல் நடந்திருக்க வேண்டிய தேர்தலிலும் அவரே கூட்டணி வேட்பாளராக இருந்ததால், புதிதாகச் சுவரில் எழுதுகிற வேலை இல்லை. ஏற்கெனவே விளம்பரங்கள் செய்தாயிற்று. இதே வசதி இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் எம்.கே. ராமகிருஷ்ணனுக்கும் இருக்கிறது.

அ.இ.அ.தி.மு.க. வேட்பாளரான எஸ். ஆர். ராதாவுக்குத்தான் பிரச்னை. தேர்தல் சின்னமே மாறிவிட்டது. முன்பு, சேவலும் இரட்டைப்புறாவும் எழுதியதையெல்லாம்



* சங்கரய்யா: "நாங்கள்தான் ஆக்கபூர்வமான எதிர்க் கட்சியாக இருக்க முடியும்."



* எஸ். கே. பாலகிருஷ்ணன்: வாபஸ் வேட்பாளர்.



* துரை செபாஸ்தியன் (இ. காங்): தெரிந்த முகம்.



* எம். கே. ராமகிருஷ்ணன் (இ. காங்): மூன்றாவது இடத்துக்குத்தான் போட்டி.

அழித்துவிட்டு மீண்டும் இரட்டை இலைச் சின்னத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

இந்தத் தொகுதியில் சுமார் முப்பத்தைந்தாயிரம் வாக்காளர்கள் சவுராஷ்டிர வகுப்பினராக இருப்பது முக்கிய அம்சமாகக் கருதப்படுகிறது. சாதி ஓட்டுகள் கட்டுக்கோப்பாக ஒரே நபருக்குப் போவதில்லை என்று பலதேர்தல்களில்தெரிந்துள்ளபோதும், சாதி ஓட்டின் போக்கைப் பற்றிய கவலைகளும், ஆராய்ச்சிகளும் அரசியல் கட்சிகளுக்குத் தவிர்க்க முடியாததாக உள்ளன.

இதற்கு முன்பு (ஒன்றுபட்ட) அ. இ. அ. தி. மு. க. வேட்பாளர் காளிமுத்துவிடம் சில ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் தோற்றுப் போனவரான எம். குமார் சவுராஷ்டிர ஓட்டுக்கள் ஒரு நபருக்கே போய்ச் சேரும் என்ற கருத்தை ஏற்கவில்லை. தமது கட்சிக்குத் தொழிற்சங்கரீதியாக சவுராஷ்டிர வகுப்பின் நெசவாளர்கள் மத்தியில் பலமான செல்வாக்கு இருப்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார். தவிர காங்கிரசுக்கு ஏ. ஜி. சுப்பராமன் போன்றோர் காலத்திலிருந்து கணிசமான சவுராஷ்டிர ஆதரவும் இருந்திருப்பதால், அந்த வகுப்பினரின் ஓட்டுக்கள் கட்சி ரீதியாகவே பிரியும் என்றும் குமார் சொன்னார்.

முக்கியமான மூன்று வேட்பாளர்களில் சவுராஷ்டிர வகுப்பைச் சேர்ந்த ஒரே ஒருவரான எஸ். ஆர். ராதாவும் தமக்கே சாதி ஓட்டு முழுக்க வந்துவிடும் என்று தாம் நினைக்கவில்லை என்று வெளிப்படையாகவே தெரிவித்தார்! அவருடைய கணக்கின்படி சவுராஷ்டிர ஓட்டுக்கள் ஐம்பதாயிரம் உள்ளன. இதில் பாதி தமக்கு வரும் என்று ராதா கணக்கிட்டிருக்கிறார்.

இந்தத் தொகுதியில் சுமார் எட்டாயிரம் முஸ்லீம் வாக்காளர்களும் இருக்கிறார்கள். அவர்கள் ஓட்டு தி.மு.க. கூட்டணியில் உள்ள மார்க்சிஸ்டான சங்கரய்யாவுக்குக் கிடைக்காது என்றும் ராதா கணக்கிடுகிறார்.

தவிர, தம்மையே மக்கள் தேர்ந்தெடுப்பார்கள் என்பதற்கு ராதா சில விநோதமான காரணங்களை வைத்திருக்கிறார். சரியான சட்டசபை அனுபவமே இல்லாத சாத்தூர் ராமச்சந்திரனும் திருநாவுக்கரசும் தி. மு. க. ஆட்சிக்குத் தகுந்த எதிர்ப்பைக் காட்ட முடியாத நிலையில், பெரும்பாலான அ. தி. மு. க. எம். எல். ஏக்கள் புதுமுகங்களாக உள்ள நிலையில் — தம்மைப் போன்ற விஷயம் தெரிந்த சண்டைக்காரப் பேர்வழி சபைக்குப் போக வேண்டும் என்று மக்கள் விரும்புகிறார்கள் என்கிறார் ராதா.

தவிர தி. மு. க. ஆட்சிக்கு வந்துவிட்ட காரணத்தாலேயே, இந்தத் தொகுதியில் எதிர்க் கட்சிக்குத்தான் வாய்ப்பு என்று ஒரு 'தியரி'யே வைத்திருக்கிறார் ராதா.

"மக்கள் எப்பவுமே ஆன்ட்டி — கவர்ன்மென்ட்டாகத்தான் இருப்பாங்க. தண்ணி இல்லையேன்னு போர் — வெல் போட்டாக் கூட, ஆளுங்கட்சிக்காரன் உதவி செஞ்சதா நெனைக்க மாட்டாங்க. நாங்க ஆட்சியிலிருந்த போதும் இதே போலத்தான்" என்றார் ராதா. எம். ஜி. ஆர். ஜெயித்தது கூட மக்களின் ஆன்ட்டி — கவர்ன்மென்ட் பார்வையால்தான் என்று ராதா கருதுகிறார். "1977 — இல் நாங்க எதிர்க்கட்சிதான். அதனாலதான் பவருக்கு வந்தோம். 80 — இல் எங்களை டிஸ்மிஸ் பண்ணி எதிர்க்கட்சியாக்கிட்டதுனால பவருக்கு வந்தோம். 84 ல அவர்(எம்.ஜி.ஆர்.) ஆஸ்பத்திரியில கெடந்ததால பவருக்கு வந்தோம்" என்று கூறும் ராதா, இரட்டை இலைச் சின்னம் தமக்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறார். கடைசி நிமிடத்தில் ஜானகியும் ஜெயலலிதாவும் ஒன்றாக வந்து பிரசாரம் செய்தால், தமக்குப் பேராதரவு வந்துவிடுமெனக் கருதுகிறார்.

ஆனால் ராதாவுக்கு நிலைமை அத்தனை சுலபமாக இல்லை. கட்சிக்குள்ளேயே தகராறுகள் இருக்கின்றன. ஜா — ஜெ அணிகளின் இணைப்பு தலைமை மட்டத்தில் நடந்திருக்கிறதே தவிர, இரண்டாம் மட்டத் தலைவர்களுக்கிடையே கூட ஒற்றுமை இல்லை. சவுராஷ்டிரரான பாலகிருஷ்ணனைப் போட்டியிலிருந்து வாபஸ் வாங்கவைக்க, ராதா பெரும்பாடு பட்டிருக்கிறார்.

தி. மு. க. வைப் பொறுத்தமட்டில் மார்க்சிஸ்ட் கட்சிக்கு இந்தத் தொகுதியை விட்டுக் கொடுத்தது பற்றி அதிருப்தி இருந்தாலும் — இந்தத் தேர்தல் அரசியல் ரீதியான முக்கியத்துவம் வாய்ந்ததாகி விட்டது. கூட்டணி தோல்வி பெறக் கூடாது என்ற கவலை இருக்கிறது.

தோழமைக் கட்சியான போதிலும் மேல



* பொன்னுச்சாமி (அ. தி. மு. க.): தகுதிக்குப் பொருந் தாத விதத்தில்......



* பி. எம். குமார்: "சவுராஷ்டிர வோட்டுக்கள் பிரிந்து போகும்."



* புலவர் செங்குட்டுவன் (தி. மு. க.): பலமும் உண்டு, பலவீனமும் உண்டு.

வையை மீண்டும் அமைப்பது போன்ற விஷயங்களில் மார்க்சிஸ்ட் கட்சி தி. மு. க. அரசுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டதை, காங்கிரஸ், அ. தி. மு. க. பேச்சாளர்கள் முக்கியமான விஷயமாகப் பிரசாரம் செய்கிறார்கள்.

இதுபற்றி சங்கரய்யாவிடம் கேட்டபோது, "இதில் ஒரு சிக்கலும் இல்லை. மார்க்சிஸ்ட் கட்சி தி. மு. க. வுடன் எதிலெல்லாம் ஒத்துழைக்க வேண்டுமோ அதிலெல்லாம் ஒத்துழைக்கும். காங்கிரஸ் எதிர்ப்பாகட்டும், மாநிலங்களுக்கு அதிகாரமும் நிதியும் தருவதிலாகட்டும், ஒற்றுமை உண்டு. மேலவை ரீதியான விஷயங்களில் எங்களுக்கு மாறுபட்ட கருத்து இருப்பதை நாங்கள் மறைப்பதில்லை. பகிரங்கமாகவே முரண்படுகிறோம். இன்றைய தமிழ்நாட்டுச் சூழலில் நாங்கள்தான் தி. மு. கழகத்துக்குச் சரியான ஆக்கபூர்வமான எதிர்க்கட்சியாக (Constructive Opposition) இருக்க முடியும். இது தி. மு. க. வுக்கும் தெரியும்" என்றார்.

ஒரு தி. மு. க. பேச்சாளர் மேடையிலேயே இதைச் சொன்னார். "நாங்க ஏதாவது தப்பு பண்ணினா எங்களைத் திருத்தக் கூடிய கட்சி சங்கரய்யா கட்சிதான். சி. பி. எம். தான் எங்களைத் தட்டிக் கேட்பாங்க. அப்படிப் பொறுப்பான எதிர்க்கட்சி இருந்தால்தான் எங்களுக்கும் நல்லது" என்றார் அந்தப் பேச்சாளர்.

காங்கிரஸ் வேட்பாளர் ராமகிருஷ்ணனைப் பொறுத்தமட்டில் அவர் கட்சி மூன்றாவது இடத்துக்காகவே போட்டிப் போடுவதாகத் தெரிகிறது. ஜனவரி 21 நடந்த தேர்தலின் போது தி. மு. க. வும் காங்கிரசும் தான் மோதுகின்றன என்று பரவலாகக் கருதப்பட்டது. இப்போது அப்படிப்பட்ட நிலை இல்லை. போட்டி தி. மு. க. வுக்கும் அ. தி. மு. க. வுக்கும்தான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

மதுரை கிழக்குத் தொகுதியில் உள்ள மக்களைப் பொறுத்தமட்டில் தண்ணீர்ப் பிரச்னையைப் பற்றிய கவலையே பெரிதாக உள்ளது. ஐந்து நாட்களுக்கொரு முறைதான் தண்ணீர் விடப்படும் என்ற அறிவிப்பு பிப்ரவரியிலேயே வந்துவிட்டது. இனி வரவிருக்கும் மாதங்களில் என்ன செய்வது என்ற கவலையில் சாதாரண மக்கள் இருக்கிறார்கள்.

மதுரை கிழக்குத் தொகுதியில் மார்க்சிஸ்ட் கட்சிக்குக் கூடுதல் வாய்ப்புள்ளதென்றால், மருங்காபுரியில் அ. தி. மு. க. அணிக்கே வெற்றி வாய்ப்பு அதிகமாக உள்ளது.

இது முழுக்கவும் கிராமங்களே நிறைந்த தொகுதியாகும். சுமார் அறுநூறு கிராமங்களை உள்ளடக்கிய இந்தத் தொகுதியில், துவரங்குறிச்சிதான் இருப்பதில் பெரிய ஊராகும். மொத்த வாக்காளர்களான சுமார் ஒரு லட்சத்து நாற்பத்தி மூன்றாயிரம் பேரில் பாதிக்குச் சற்று அதிகமான பேர் பெண்களாவர்.

இந்தத் தொகுதியிலும் பொதுவாக பிப்ரவரி கடைசி வாரத்தில் பிரசாரம் மந்தமாகவே இருந்தபோதும் அ. தி. மு. க. அணி முன்கூட்டியே பிரசார வேலையைத் தொடங்கிவிட்டதைக் காண முடிந்தது.

போட்டியிடும் மூன்று முக்கிய வேட்பாளர்களில் தி. மு. க. வேட்பாளரான புலவர் செங்குட்டுவன் மருங்காபுரி பஞ்சாயத்து யூனியன் தலைவராக இருக்கிறார். அதுவே அவருடைய பலமாகவும் பலவீனமாகவும் இருக்கிறது. அவர் மீது பல புகார்கள் உள்ளூரில் கூறப்படுகின்றன.

காங்கிரஸ் வேட்பாளரான துரை. செபாஸ்தியன் முன்பு கரூர் தொகுதி எம். பி. யாக இருந்தவர். கட்சி இந்தப் பகுதியில் பலம் பெறாத போதும், பழைய எம். பி. யானதால் இவர் தெரிந்த முகமாகக் கருதப்படுகிறார். அப்படி அவரது முகத்தைத் தெரிந்த பலரும் கொண்டிருக்கிற அபிப்பிராயம் அவருக்குச் சாதகமாக இல்லை.

மீண்டும் இணைந்த அ. தி. மு. க. வின் வேட்பாளராக உள்ள கல்லூரிப் பேராசிரியர் பொன்னுசாமிக்குப் பெயர் அவ்வளவாக ரிப்பேராகவில்லை என்றாலும், அவர் தமது கல்லூரி ஆசிரியர் தகுதிக்குப் பொருந்தாத விதத்தில் ஜெயலலிதா காலில் விழுந்து வணங்கிய நிகழ்ச்சி பரவலாகப் பேசப்படுகிறது.

இந்தத் தொகுதியில் உள்ள பஞ்சாயத்து யூனியன்களில் மருங்காபுரி, வையம்பட்டி, மணப்பாறை ஆகிய மூன்றில் தி. மு. கழகமே அதிகாரத்தில் உள்ள போதிலும், ஜனவரி 21-இல் நடந்த தேர்தல்களில், சுற்றியுள்ள தொகுதிகள் அனைத்திலும் ஜெயலலிதா அணியே வெற்றி பெற்றிருக்கிறது. (பெரி

யார் மாவட்டத்துக்கு அடுத்தபடியாக 'ஜெ' அணிக்கு அதிக சீட் கிடைத்தது திருச்சி மாவட்டத்தில்தான்.)

இந்தத் தொகுதியிலும் தண்ணீர்ப் பிரச்னை முக்கிய பிரச்னையாகவே இருக்கிறது. அமைச்சர்கள் வீராசாமி, கே. என். நேரு இங்கேகுழாய்க்கிணறு போடும்வேலைகளை முடுக்கி விட்டிருக்கிறார்கள். பல கிராமங்களில் 'ரிக்' இன்னிக்கு வருதுன்னாங்க, நாளைக்கு வருதுன்னாங்க' என்று வேட்பாளரின் வருகைக்குப் பதில் 'ரிக்'கின் விசிட்டை எதிர்பார்த்துப் பேசிக் கொள்கிறார்கள்.

ஆட்சியிலிருக்கும் தி. மு. கழகத்துக்கு உள்ள இக்கட்டான நிலையே இரண்டு இடைத் தேர்தல் தொகுதிகளிலும் உள்ள தண்ணீர்ப் பிரச்னைதான். தண்ணீர்ப் பிரச்னையைத் தணிக்க, 'போர் வெல்' போடாமலும் இருக்க முடியாது. போட்டால், தேர்தலுக்காகச் செய்த வேலை என்று பேச்சு வாங்காமலும் இருக்க முடியாது என்ற நிலைமையில் — குழாய்க் கிணறு போடும் வேலை மும்முரமாக இரண்டு தொகுதிகளிலும் நடக்கின்றது.

இந்த இடைத்தேர்தல்களில் முக்கியமாக அரசியல் நோக்கர்கள் கவனிக்கும் விஷயம் 'இரட்டை இலை'ச் சின்னத்தின் செல்வாக்கு பற்றித்தான்.

எம். ஜி. ஆர். பதினைந்து வருட காலம் பரப்பி வைத்திருந்த சின்னமான இரட்டை இலை இல்லாததால் ஜனவரி 21—இல் நடந்த தேர்தலில் பாதிக்கப்பட்டோம் என்று இரண்டு அணிக்காரர்களும் கூறிவந்திருக்கிறார்கள். இப்போது மீண்டும் வந்துள்ள இரட்டை இலைச் சின்னம் எம். ஜி. ஆரை நினைவுபடுத்தி அவர் நினைவில் வோட்டைப் பெற்றுத் தந்துவிடுமென அவர்கள் நம்புகிறார்கள்.

அந்த நம்பிக்கை உண்மையா என்பது மார்ச் 12—ந் தேதி தெரிந்துவிடும். சின்னங்கள் ஒரு பிரச்னையே அல்ல என்று சங்கரய்யா கூறுவதிலும் பொருள் இருக்கிறது.

''சாதாரண மக்கள் இருபது முப்பது சின்னங்களுக்கு நடுவே இரட்டை இலை இல்லாத போதும், புதிதாக இருபது நாட்களில் அறிமுகமான சேவலையோ, புறாவையோ தேடிப் பார்த்தும் ஓட்டு போட்டிருக்கிறார்கள். எனவே சின்னம் பழையதா புதியதா என்பதில் எதுவும் இல்லை. மக்கள் அரசியல் பார்வையோடு, தாங்கள் ஆதரிக்க விரும்பும் சக்திகளுக்கே ஓட்டு போடுகிறார்கள்'' என்றார் அவர்.

சுயேச்சைகள் இல்லாமல் தேர்தல்கள் உண்டா? மருங்காபுரியில் மொத்த வேட்பாளர்கள் 15 பேர்! மதுரை கிழக்கில் 31 பேர்! வழக்கமான வீரப்ப கவுண்டர் இரண்டிலும் உண்டு!

— நமது சிறப்பு நிருபர்

படங்கள்: ஜஹிர்.

# பரிசு: கலர் டிவி!

டி. வி. அல்லது வீடியோ தொடர்பான எந்த ஓர் அனுபவத்தையும் ரத்தினச் சுருக்கமாக எழுதலாம். டி. வி. நிகழ்ச்சிகளைக் கல்கியில் அரைப் பக்கத்துக்கு மேற்படாமல் நல்லவிதமாகவோ கிண்டலாகவோ விமர்சிக்கலாம். ஆனால் ஒன்று: நீங்கள் எழுதியதைப் படிப்பவர் சிரித்தாக வேண்டும்! பிரசுரமானால் பரிசு ரூ. 25/—. தவிர, பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு ஆறு மாதம் சென்று குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டி. வி. பரிசு.

மிகச் சமீபத்திய கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் உள்ள தேதிப் பகுதியை மட்டும் — மூன்று வரிகள் — நீங்கள் எழுதும் துணுக்கு அல்லது விமர்சனத்துக்கு மேல்புறம் ஒட்டி அனுப்புங்கள்.



# வியர்க்குருவிலிருந்து நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

**நைஸில்** உபயோகியுங்கள்.

**வியர்க்குருவிலிருந்து விரைவில் நிவாரணம் பெறுங்கள்.**

நைஸில் **மருந்துக்கலவையுள்ள** பவுடர். இது வியர்க்குருவின் எந்தத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதைத் தடுப்பதுடன், வியர்க்குரு பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது.

1. அளவுக்கு மீறிய வியர்வை ஏற்படுவதைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.





# பாக்யராஜ் பேட்டி:



## "சிவாஜி தோற்று விட்டார் என்பதால் பாக்யராஜ் அரசியலுக்கு வரக் கூடாதா?"

கல்கி: 'பாக்யா' இதழில் எம். ஜி. ஆருக்கு எழுதியுள்ள கடிதத்தில், சமீபத்திய தேர்தல் முடிவுகள், அ. தி. மு. க.வின் அடிமட்டத் தொண்டர்களுக்குப் பெருத்த அவமானம். தொண்டர்களிடையே அவசரத் தேவை ஒற்றுமை' என்று சொல்லியிருக்கிறீர்கள். பிளவுபட்ட கோஷ்டிகள் ஒன்றாய் இணைந்துவிட்ட இன்றைய நிலையில், ஒற்றுமை தேவை என்று கூறிய நீங்கள் தனிக் கட்சி ஆரம்பிப்பானேன்?

பாக்யராஜ்: சுயநலக் காரணங்களுக்காகத் தலைவர்கள் பிரிந்த போது, தொண்டர்களும், அந்த உண்மையான காரணங்கள் தெரியாமல் பிரிந்து போனார்கள். அப்போது, தொண்டர்களிடையே ஒற்றுமை தேவை என்றேன். ஆனாலும் கட்சி பிளவுபட்டது... நான் ஜானகி அம்மாளின் அணியில் இருக்க முடிவு செய்தேன். ஆனால் அங்கேயும் நிலைமை சரியில்லை. அவர் சுதந்திரமாய் முடிவுகள் எடுக்கவோ, செயல்படவோ அவரைச் சுற்றியிருந்தவர்கள் விடவில்லை. அவர்களை, ஜானகி அம்மாவால் அடக்கி வைக்க முடியவில்லை. இவற்றையெல்லாம் ஆறேழு மாத காலம் நான் உற்றுக் கவனித்து வந்தேன். ஆட்சி மன்றக் குழுவில் நான் உதாசீனப்படுத்தப்பட்டது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். இந்தச் சூழ்நிலையில் நான் கட்சிக்குள் இருந்து கொண்டு கஷ்டப்பட விரும்பவில்லை. எனவே கட்சியை விட்டு வெளியேறி நான் எனக்கென்று இருக்கிறவர்களை வைத்துக் கொண்டு தனி

யாய் இயங்குவது என்று முடிவு செய்தேன். என் கட்சிக்கு என்னை நம்பி இப்போது வருகிறவர் வரட்டும். காலப்போக்கில், என் செயல்பாடுகளினால், ஈர்க்கப்பட்டு வருகிற வர்களும் வரட்டும். என்ற எண்ணத்தில் தான் கட்சி ஆரம்பித்திருக்கிறேன். பிரிந்த அ.தி.மு.க. இணைவதற்கான அடிப்படைக் காரணங்களும்சரியில்லை. இரட்டை இலைச் சின்னத்துக்காகவும், சொத்துக்காகவும் மறுபடியும் இணைவதில் எனக்கு உடன் பாடில்லை. 'மோரில் விஷம் வைச்சுக் கொன்னுட்டாங்க; பெண்டாட்டியே இல்லை; நாட்டுக்கு நான்; வீட்டுக்கு அவங்க' என்றெல்லாம் பேசிவிட்டு, இன்றைக்கு 'தாயே வா! தலைமையேற்க வா!' என்று கூப்பிடறாங்க. இதெல்லாம் எந்த விதத்தில் நியாயம்? இப்போது இணைப்பு முடிந்து விட்டாலும், இன்னும் ஆறு மாதத்திலோ, ஒரு வருஷத்திலோ எல்லோரும் கட்சியை விட்டு ஓடத்தான் போகிறார்கள்.

கல்கி: அ. தி. மு. க. விலிருந்து விலகிய பின், இருக்கிற அரசியல் கட்சிகள் எதிலும் சேராமல், புதிய கட்சியை ஏன் துவக்கினீர்கள்?

பாக்ய: எம். ஜி. ஆரைத் தலைவராய் ஏற்றுக் கொண்டவன் நான். அதனால், வேறு ஒரு கட்சிக்குப் போய், வேறு ஒருவரைத் தலைவராய் ஏற்றுக் கொள்வதில் உடன்பாடு இல்லை. அதே சமயம் மக்களுக்கு உதவும் வகையில் பொதுச் சேவை செய்வதிலிருந்தும் முழுமையாய் விலகிக் கொள்ள விருப்பமில்லை. எனவேதான் தனிக் கட்சி.

கல்கி: உங்கள் கட்சியின் கொள்கை என்ன? என்ன சாதிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது?

பாக்ய: தன்னிறைவு — தனி மனிதன் ஒவ்வொருவனும் தன்னிறைவு அடையப் பாடுபட வேண்டும் என்பதுதான்.

கல்கி: இன்றுள்ள எல்லா அரசியல் கட்சிகளுமே அடிப்படையில் இப்படிப்பட்ட கொள்கையைக் கொண்டவை தாமே...? உங்களுக்கென, சிறப்பான கொள்கை ஏதாவது இருக்கிறதா?

பாக்ய: எந்தக் கட்சிக்குமே அடிப்படைக் கொள்கை நல்லதாகத்தான் இருக்கும். தவறான கொள்கைகளுக்காக யாரும் கட்சி ஆரம்பிப்பதில்லை. வாய்ப்பு கிடைக்கும் போது, கொள்கையைச் செயல்படுத்துகிறார்களா? வாய்ப்பைத் — தவறாகப் பயன்படுத்தாமல் இருக்கிறார்களா என்று பார்க்க வேண்டும். அதுதான் முக்கியம்.

கல்கி: வாய்ப்பு கிடைத்தால் உங்கள் கொள்கையைச் செயல்படுத்த என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?

பாக்ய: இப்போதுதானே கட்சியை ஆரம்பித்திருக்கிறேன்? போகப் போகத்தானே ஒவ்வொன்றாய்த் திட்டமிட முடியும்? இப்போதைய முக்கிய திட்டம் கட்சியைப் பலப்படுத்துவதுதான். அதே சமயத்தில் முடிந்தவரை மக்களுக்கு உபயோகமான சில காரியங்களைச் செய்து வருவோம்.

கல்கி: கட்சியைப் பலப்படுத்த என்ன சாணக்கியங்களைக்(ஸ்டிராடஜி)கையாளப் போகிறீர்கள்?

பாக்ய: தனிப்பட்ட முறையில் நான் எல்லா இடங்களுக்கும் சுற்றுப் பயணம் போயாகணும். என் கட்சித் தொண்டர்கள் தங்கள் ஊரிலுள்ள ஜனங்களுக்கு உபயோகமாய் இருக்கிறார்கள் என்று பெயரெடுத்தாலே போதும். எவ்வளவு இடங்களில் கட்சி பரவுகிறது என்பதைவிட, இருக்கிற

''எல்லாரும் இப்படிக் குற்றச்சாட்டு சொல்வதனால்தான் எனக்கு வைராக்கியம் வருகிறது...''





எம். ஜி. ஆர். மக்கள் முன்னேற்றக் கழகம் – தொடக்க விழா.

தொண்டர்கள் ஜனங்களுக்கு எவ்வளவு உபயோகமாய் இருக்கிறார்கள் என்கிற செய்தி என் காதுகளை எட்டினால் அது போதும். இதைச் சாதிக்க ஐந்து வருடமானாலும் சரி! பத்து வருடமானாலும் சரி!

*கல்கி:* உங்கள் கட்சித் தொண்டர்கள் அனைவருமே உங்கள் ரசிகர் மன்றத்தினர் தாமே?

*பாக்ய:* என் கட்சியில் ரசிகர் மன்றத்தினரும் இருக்கிறார்கள்; அ. தி. மு. க. வின் இருபிரிவுகள், தி. மு. க., காங்கிரஸ் போன்ற மற்ற கட்சிகளிலிருந்து பிரிந்து வந்தவர்களும் இருக்கிறார்கள். அரசியலே வேண்டாம் என்று ஒதுங்கியிருந்தவர்களும் கூட என் கட்சியில் இப்போது உறுப்பினர்கள். இதிலே படித்தவர்கள், டாக்டர்கள், வக்கீல்கள் கூட உண்டு.

*கல்கி:* இவர்கள் எல்லாரும் என்ன எதிர்பார்ப்புடன் உங்கள் கட்சியில் சேர்ந்திருக்கிறார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

*பாக்ய:* நான் பொறுமையாய், நிதானமாய், மனப்பூர்வமாய் ஜனங்களுக்காகச் செயல்படுவேன் என்கிற நம்பிக்கையில் தான். என் கட்சியில் டாக்டர் உஷாராணி என்பவர் சேர வந்தபோது, காரணம் கேட்டேன். ''சமூக சேவையில் ஈடுபாடு கொண்ட நான், பல முறை அரசியலில் சேர விரும்பியபோது, பலர் அந்தக் கருத்தை வரவேற்கவில்லை. நானும் ஒதுங்கியே இருந்தேன். நீங்கள் கட்சி ஆரம்பித்ததும், உண்மையாகவே மக்களுக்கு நன்மை செய்வீர்கள் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. உங்கள் கட்சியில் சேருகிறேன்'' என்று பதில் சொன்னார். என் மேல் வைத்துள்ள நம்பிக்கையைக் காப்பாற்றும் அளவுக்கு நான் உண்மையாய்ச் செயல்படுவேன்.

*கல்கி:* கட்சியை உருவாக்கி, நடத்திச் செல்ல உங்களுடைய மனப்பூர்வமான (ஸின்ஸியர்) செயல்பாடு மட்டுமே போதுமானது என்று நினைக்கிறீர்களா?

*பாக்யா:* உண்மை மெல்ல மெல்லத்தான் வளரும். நான் அரசியலில் போட்டி, பொறாமையுடன் ஈடுபட விரும்பவில்லை. எனக்குக் குறுக்கு வழிகள் எல்லாம் தெரியாது. நிதானமாய்ச் செயல்பட்டு வெற்றி பெற முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

*கல்கி:* அரசியலில் ஈடுபட அனுபவமும் சாணக்யமும் வேண்டாமா? பல வருஷங்களாக சினிமாவில் பிரபலமாகி அரசியலிலும் ஈடுபட்ட சிவாஜி, தனிக்கட்சி ஆரம்பித்துத் தோல்வியைத் தானே சந்தித்துள்ளார்? அப்படி இருக்கையில் எந்த தைரியத்தில் நீங்கள் இதில் இறங்கினீர்கள்?

*பாக்ய:* (மிகக் கோபமாக) சினிமா நடிகரான சிவாஜி, அரசியலில் தோற்று விட்டார் என்பதால் பாக்யராஜ் அரசியலுக்கு வரக் கூடாதா? கட்சி ஆரம்பிக்கக் கூடாதா? உங்கள் வாதமே தவறு. நான் தவறு எதுவும் செய்யவில்லை என்ற தைரியம் எனக்கு இருக்கிறது. அது போதுமே! சிவாஜி கூட, இன்னும் முந்தைய கால கட்டத்திலேயே கட்சி ஆரம்பித்து, நிதானமாய், திட்டமிட்டுச் செயல்பட்டிருந்தார் என்றால் நிச்சயம் இப்படி ஒரு தோல்வியைச் சந்தித்திருக்க மாட்டார். நீங்கள் நினைக்கிறாற்போல் நான் அவசரக் குடுக்கையில்லை. நான் உடனடியாய்த் தேர்தலைச் சந்திக்க வேண்டும் என்று அவசரப்படவில்லை. எனக்கு ஆட்சியைப் பிடிப்பதைவிட, மக்களிடையே நல்ல பெயர், மதிப்பு, மரியாதை பெறுவதுதான் முக்கியம். அந்த நிலையை அடைந்தபின், கட்சியினர் விருப்பப்பட்டால், தேர்தலைச் சந்திப்பதே எனது திட்டம். நான் அரசியலை

* கலையுலக வாரிசு.



முழுமையாய் அறிந்தவன் இல்லையே! இன்னும் தெரிந்து கொள்ள வேண்டியவை நிறைய இருக்கின்றனவே!

*கல்கி: அடுத்த தேர்தலில் என் கட்சியின் சக்தியைப் பார்த்து அசந்து போவீர்கள் என்று நீங்களே பொதுக் கூட்டத்தில் சொல்லியிருக்கிறீர்களே! ஆனால் இப்போது அவசரமில்லை என்றும் கூறுகிறீர்கள்?*

பாக்ய: மீட்டிங்கில் பேசும் போது, உணர்ச்சிவசப்பட்டு, அப்படிச் சில வார்த்தைகள் பேசுகிறோம். வார்த்தைகள் மாறி விழலாம். ஆனால் பத்திரிகை பேட்டி என்பது வேறு... இப்போது நீங்கள் என்னை எப்படி வேண்டுமானாலும் விமர்சனம் பண்ணுங்கள். எந்த விமர்சனங்களையும் என்னால் தாங்கிக் கொள்ள முடியும். பூட்டாசிங்கிடமிருந்து நான் ஐம்பது லட்சம் வாங்கிக் கொண்டதாய்க் கிசுகிசு எழுதுகிறார்கள். அதைவிடவா...! எனவேதான் இப்போதெல்லாம் தினமும் சாமி கும்பிடும் போது, ''ஆண்டவனே! எனக்குப் பொறுமையை நிறையக் கொடு'' என்று வேண்டிக் கொள்கிறேன். ஆனால் ஒன்று... என்னை இப்போது கடுமையாக விமர்சனம் பண்ணுபவர்கள் அனைவருமே—கல்கி உள்பட—என்னைப் பாராட்டும் காலம் வரத்தான் போகிறது.

*கல்கி: சினிமாக்காரர்களை ஆதரிக்காதீர்கள் என ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் கூறியபோது, 'ரொம்ப சுத்தமான வார்த்தை' என விமர்சித்தீர்கள். இன்றைக்கும் உங்கள் கருத்து அதேதானா?*

பாக்ய: சினிமாவிலிருந்து அரசியலுக்கு வந்த சிலரின் நடவடிக்கைகளைப் பார்த்து விட்டு அவர் சொன்னதை நான் அப்படி விமர்சித்தேன். ஆனால் சினிமாத் துறையிலும் நல்லது செய்ய நினைப்பவர்கள் இருக்கலாமே! எல்லாரும் இப்படிக் குற்றச்சாட்டு சொல்வதனால்தான் சினிமாவில் இருந்து கொண்டே அரசியல் மூலம் மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று எனக்கு வைராக்கியம் வருகிறது. என் நடவடிக்கைகளையும், சுவாமிகள் நாலைந்து வருடங்களுக்குப் பார்க்கட்டும். அப்புறமும் அப்படிச் சொன்னால் நான் ஒதுங்கிக் கொள்கிறேன்.

*கல்கி: அரசியல் பிரவேசம் காரணமாக சினிமாவைப் பிரசார சாதனமாகப் பயன்படுத்தத் திட்டமிட்டுள்ளீர்களா?*

பாக்ய: அப்படியெல்லாம் இல்லை. அரசியலையும், சினிமாவையும் கலந்து, உல்டா பண்ணி, கெட்ட பெயர் சம்பாதித்துக் கொள்ள நான் விரும்பவில்லை. பார்க்கப் போனால் நான் சில 'காம்ப்ரமைஸ்'களைச் செய்ய வேண்டி வரும். முன்பு, படம் நன்றாகப் போக வேண்டும் என்பதற்காக, நாலு பேர் கடுமையாய் விமர்சிப்பார்கள் என்று தெரிந்தும், பத்து பேர் ரசிப்பார்கள் என்பதற்காக ஒரு செக்ஸியான காட்சியையோ, இரட்டை அர்த்த வசனத்தையோ இடம்பெற வைத்திருக்கிறேன். இனி அதைப் போன்ற காட்சிகளைத் தவிர்த்து விடுவேன்.

*கல்கி: இன்றைய சூழ்நிலையில், அரசியல் கட்சியை நடத்த அத்தியாவசியமான ஒன்று பணம். நீங்கள் அதை எப்படிச் சமாளிக்கப் போகிறீர்கள்?*

பாக்ய: பணம் இல்லாமலேயே, ஓர் அரசியல் கட்சி மக்களுக்கு என்ன செய்ய முடியும் என்பதைத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். லட்ச லட்சமாய்த் தேர்தலில் செலவழித்துவிட்டு, இருபதாயிரம், முப்பதாயிரம் மட்டும் செலவழித்ததாகக் கணக்குக் கொடுத்திருக்கிறார்களே! இது என்ன நியாயம்? மனச்சாட்சியை அடகு வைத்துச் செய்யப்படும் இத்தவறுகள் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டத் தவறுகளாகி விட்டன. இனி இவற்றை மக்களிடையே



''வேறு தலைவரை ஏற்றுக் கொள்வதில் எனக்கு உடன்பாடு இல்லை.''

யும், அரசாங்கத்திடமும் எடுத்து வைத்து ரகளை பண்ணித்தான் ஆகணும். கட்சிக்குப் பணத்தை வாரிவிடும் அளவுக்கு நான் ஒன்றும் சம்பாதித்து விடவில்லை. 'உங்களால், உள்ளூர் மக்களுக்கு உருப்படியாய் ஏதாவது செய்ய முடியுமானால் செய்யுங்கள். ஏகமான எதிர்பார்ப்புகளுடன் வந்து—தலைமைக் கழகம் இதைச் செய்யலை, அதைத் தரலை என்று ஏமாந்து போகாதீர்கள்' என்று நான் என் தொண்டர்களுக்கு மிகத் தெளிவாய்ச் சொல்லி விடுகிறேன். என் கட்சி லட்சங்களுக்காக ஆரம்பிக்கப் பட்டதில்லை; லட்சியங்களுக்காகத்தான் ஆரம்பிக்கப்பட்டது.

*கல்கி: சமீபத்தில் சாராய ஊழல் சம்பந்தமான விவரங்கள் வெளிப்பட்ட போது, ''ஊழலை நிரூபியுங்கள். நிரூபித்தால் நான் பொறுப்பேற்றுக் கொள்கிறேன், என்ன தண்டனை தந்தாலும் ஏற்றுக் கொள்ளுகிறேன்'' என்று சொல்லியிருக்கிறீர்களே! இது எப்படிச் சரியாகும்?*

பாக்ய: சம்பந்தப்பட்டவரே இருந்து,



''என்னைக் கடுமையாக விமர்சிப்பவர்கள் கூட என்னைப் பாராட்டும் காலம் வரும்....''

பதில் தந்தால் அது வேறு. ஆனால் அவர் மறைந்துவிட்ட பின், மற்றவர்கள் திட்டம் போட்டு, முழுக்க முழுக்க அவர் மீதுதான் தவறு என்பது போல ஓர் இமேஜை ஏற்படுத்துவது எனக்கு உடன்பாடில்லை. மக்கள் வரிப்பணம்தானே அது? யார் யார் வாங்கினார்கள்? அதை எங்கே வைத்திருக்கிறார்கள் என்று முழுமையாய்க் கண்டுபிடித்துப் பணத்தைக் கொண்டு வாருங்கள் என்றுதானே சொல்கிறேன்.

கல்கி: பொதுத் தேர்தல் நடந்து முடிந்துள்ள இந்தத் தருணத்தில், லஞ்சப் பணத்தை மறுபடி கொண்டு வருவதெல்லாம் சாத்தியமா? மேலும் எம். ஜி. ஆர். செய்த தவறுக்கு நீங்கள் எப்படிப் பொறுப்பும் தண்டனையும் ஏற்க முடியும்?

பாக்ய: எம். ஜி. ஆர். ஒரு போதும் அப்படிச் செய்ய மாட்டார்; அதற்கு அவருக்கு அவசியமில்லை என்று நான் நம்பிக் கொண்டிருக்கிறேன். ஆகவே, அவர் மீது குற்றம் சாட்டினால், என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. கூட இருந்த அனைவருமே வாயை மூடிக் கொண்டிருப்பது எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்துகிறது.

கல்கி: அப்படியெனில், தலைவருக்குத் தெரியாமல், அவர் கீழே இருப்பவர்கள் இப்படியெல்லாம் செய்திருப்பார்கள் என்கிறீர்களா?

பாக்ய: அவருக்குத் தெரியாமலேயே இப்படி சில விஷயங்கள் நடந்திருக்க வாய்ப்பு இருக்கிறது.

கல்கி: அப்படியானாலும் தார்மீகப் பொறுப்பு முதல்வருக்குத்தானே?

பாக்ய: அவர் ஆட்சியில் தவறுகள் நடந்திருக்கலாம். சில பலவீனங்கள், குறைபாடுகள் இருக்கலாம். ஆனால் அவரது நற்பெயரைக் கெடுப்பதற்காகவே இவர்கள் முயன்று வருகிறார்கள். கோப்புகளைப் பகிரங்கமாய் வைத்து, விசாரணை நடத்தி, ஊழலை நிரூபியுங்கள் என்றுதான் நான் சொல்கிறேன். அது மற்றவர்களுக்கும் ஓர் எச்சரிக்கையாய் இருக்கட்டும். இதிலே ரகசியம் என்ன வேண்டிக் கிடக்கிறது? நான் எனது பத்திரிகைக்காகக் கலைஞரைப் பேட்டி கண்டபோது, ''நீங்கள் ஆட்சிக்கு வந்தால் எதையும் பகிரங்கமாய்ச் செய்வீர்களா? அப்போது எதிர்க் கட்சிகள் விழிப்புடன் கண்காணிக்க முடியுமில்லையா?'' என்று கேட்டேன். அதற்கு அவர். ''எதிர்க்கட்சியும் கூட்டுச் சேர்ந்து தவறு செய்தால் என்ன செய்வது? ஒவ்வொருவரும் நாணயத்தான் இருந்த வேண்டும்'' என்று பதில் சொன்னார் (சிரிப்பு).

கல்கி: நீங்களும், டி. ராஜேந்தரும் சேர்ந்து ஒரு கட்சி ஆரம்பிக்கப் போவதாய்ப் பேசப்பட்டதே! அதுமாதிரி ஓர் எண்ணம் உங்களுக்கு உண்மையிலேயே இருந்ததா?

பாக்ய: எனக்கும், டி. ராஜேந்தருக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை; அரசியல் கிசுகிசுக்கள் அபார கற்பனையில் உருவாக்கப்படுகின்றன. ஊரிலிருந்து வரும் என் உறவுக்காரரை என் வீட்டு வாசலில் வரவேற்று, கையிலிருக்கும் பெட்டியை மரியாதைக்காக வாங்கிக் கொண்டாலும் கூட, அதைப் படமெடுத்துப் பெட்டியில் பணம் வந்ததாய் எழுதுவார்கள் சில பத்திரிகைக்காரர்கள்!

கல்கி: ஜானகி அம்மாள் அரசியலிலிருந்து விலகியது பற்றி உங்கள் கருத்து என்ன?

பாக்ய: அவர்களுக்கு வயசாகிவிட்டது. பேசாமல் 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்வதுதான் நல்லது. இத்தனை நாட்கள் அவர் பட்டது வேதனை கலந்த அவமானம். ஜனங்கள், தீர்மானமாய்த் தோற்கடித்தது பரிதாபமானது.

கல்கி: இனி முழுநேர அரசியல்வாதி ஆகி விடுவீர்களா?

பாக்ய: சினிமாவை என்னால் முழுசாய் உதறி விட முடியவே முடியாது. சினிமாவிலிருந்து கொண்டேதான் அரசியலில் ஈடுபடுவேன். சினிமாவில், பாக்யராஜை, மக்கள் இன்னும் பத்து இருபது வருஷங்களுக்கு ஏற்றுக் கொள்வார்கள்.

கல்கி: ஒரு முழு நேர சினிமாக் கலைஞர் முழு நேர அரசியல்வாதியாகவும் சீராகச் செயலாற்ற முடியுமா....?

பாக்ய: அப்படி முழு நேர அரசியல்வாதியாக நான் இப்போது செயல்பட முடியாது. நான் . .ந்த அங்கீகாரத்தை இப்போதே அளிக்குப்ட. . கேட்கவுமில்லை.

கல்கி: நாளை நீங்கள் சட்டசபை உறுப்பினரானால் அந்தப் பொறுப்புகளை எப்படி நிறைவேற்றுவீர்கள்?

பாக்ய: நான் இல்லாமல் என் கட்சி சட்டசபையில் செயல்படாதா என்ன....? நான் சட்டசபை உறுப்பினராக வேண்டும் என்ற கட்டாயம் இல்லையே.

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி.

அட்டை வண்ணப்படம்: யோகா

படங்கள்: 'சுபா' ரவிசங்கர்.



# வெறும் பாசத்தினால் மட்டுமே இவர்களின் மருத்துவக் கட்டணங்களை செலுத்த முடியாது

## மெடிக்ளைம் உதவியால் செலுத்த முடியும்

ஆம், மெடிக்ளைம்—ஒரு ஹாஸ்பிடலைசேஷன் மற்றும் டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் பெனி∴பிட் பாலிஸி, இது உங்கள் குடும்பத்தினர்க்கு ஒரு வரப்பிரசாதம்.

நீங்கள் எத்தனை அன்பு செலுத்தினாலும் சரி... உங்கள் கம்பெனி எத்தனை மருத்துவத் திட்டம் வழங்கினாலும் சரி... அவை உங்களுக்கு ஏற்படும் பெரிய நோய்கள், அறுவை சிகிச்சைகள், விபத்துகள் போன்றவைகளுக்குத் தேவைப்படும் மருத்துவ பராமரிப்புக்கு ஆகும் கட்டணங்களை செலுத்திவிட முடியாது.

ஆகவே உங்களுக்குத் தேவை மெடிக்ளைம்.

உங்களுடைய தேவைகளுக்கு ஏற்ப - பலரக மருத்துவ வசதிகளை வழங்குகிறது மெடிக்ளைம்.

வீட்டில் இருந்து கொண்டே மருத்துவமனையில் பெறும் சிகிச்சை வசதிகளுக்கும் கூட பாதுகாப்பளிக்கிறது.

இத்திட்டத்தின் கீழ் குடும்பத்தினர் அனைவருக்கும் பாதுகாப்பு செய்து கொண்டால், பிரிமியத்தில் தள்ளுபடியும், வரிவிலக்கும் கிடைக்கும்.

பாசத்தின் பிரதிபலிப்பாக உங்கள் குடும்பத்தினர்களுக்கு, மெடிக்ளைம் திட்டத்தின் கீழ் பாதுகாப்பு செய்து கொள்ளுங்கள்.

இதற்கு ஆகும் செலவோ மிகச் சொற்பம். உங்களுக்கு இதன் மூலம் கிட்டும் பலனோ மிக்க அதிகம்.

இத்திட்டம் உங்கள்பால் மிக்க அக்கறை காட்டுகிறது.

| ஆண்டொன்றுக்கு பிரிமியம் ரூ. | ஹாஸ்பிடலைசேஷன் ரூ. | டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் ரூ. |
|---|---|---|
| 200 | 10,500 | 3,100 |
| 250 | 17,600 | — |
| 350 | 25,500 | — |
| 600* | 37,750 | 5,250 |
| 840* | 52,750 | 7,400 |
| 1300* | 82,500 | 11,500 |

வயது வரம்பு: 5-70 ஆண்டுகள்

* கூடுதல் பிரிமியம் செலுத்துவதின் பேரில் பர்சனல் ஆக்ஸிடென்ட் காப்பு கிடைக்கும்.

**MED+CLAIM**

மெடிக்ளைம் வழங்குவோர் நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்

**NEW INDIA ASSURANCE**



A subsidiary of the General Insurance Corpn. of India

எந்த விபத்திற்கும் நாங்கள் பாதுகாப்பு அளிக்கிறோம்!

CONTOUR ADS-NIA-278E/87 TAM R


இந்தியக் குடிமகன்
வரியே இல்லை, பார்த்தியா. உன்னை ஒண்ணும் பண்ணாது!
பட்ஜெட்
வோட்டு


நீ அவர் கையை மாத்திரமா முறிக்கிறாய்.. சட்ட மன்ற நாகரிகத்தை முறிக்கிறாய்! ஜனநாயகப் பண்பை முறிக்கிறாய்!


கவர்னர்


கலிஸ்தான் ஆதரவு துரோகியை நீங்க கண்டிக்கவில்லை! நீங்களும் தேச விரோதிகள்! எங்களைப் போல உங்க கட்சிக் காரங்களும் உயிர்த் தியாகம் பண்ணியிருக்காங்க! நீங்க தேச பக்தர்கள்! நானா? மன்னிப்பா? கேட்க முடியாது! ஐயோ.. நான் வருந்துகிறேன்! அந்தக் கலிஸ்தான் துரோகியை ஏன் கட்சியை விட்டு நீக்கவில்லை? பதில் சொல்லுங்க! ஆனா நீங்க துரோகி இல்லை! தேச பக்தர்கள் மன்னிப்பு கேட்கவில்லை! நான் வருந்துகிறேன்!




# கல்கி

1989 மார்ச் 12
மலர் 47 இதழ் 32
விபவ மாசி 29




## தேர்தல் பட்ஜெட்

தேர்தல் ஆண்டில் அதிகமாகப் புதிய வரிகளை மக்கள் மீது சுமத்தாமல் இலேசாக விட்டுவிடுவது ஜனநாயக நாடுகளில் வழக்கமான கதை. ஆளும் கட்சிக்கு ஆதரவைத் தேடுவதுதான் இதன் உள்நோக்கம் என்றாலும் பொதுவாக அனைத்துக் கட்சிகளையும் சேர்ந்த எல்லாத் தரத்து மக்களுமே, 'தப்பினோம்' என்று நிம்மதிப் பெருமூச்சு விடுவார்கள்.

ஆனால் தற்போது பாரத அரசு கொண்டு வந்துள்ள நடப்பு ஆண்டுக்கான பட்ஜெட், வரப் போகும் நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புக்களை அதிகரிக்கச் செய்வதற்காகவே திட்டமிட்டுப் போடப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது வியப்பு அல்ல, வெட்கமும் வேதனையும் ஏற்படுகிறது!

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கடந்த நவம்பர் மாதம் கூடி, நேருஜியின் நூற்றாண்டினையொட்டி, ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவருக்கு வேலை வாய்ப்பு, குழந்தைகளுக்கு இலவசச் சத்துணவு, பெண்களுக்கு இலவசப் புடைவைகள், ஏழ்மை ஒழிப்பு ஆகிய இவற்றைத் தீவிரமாகச் செயல்படுத்த வேண்டும் என்று தீர்மானம் போட்டது. இந்த எம். ஜி. ஆர். பாணித் திட்டத்தை நிறைவேற்றவே பட்ஜெட்டில் சிறப்பிடம் தந்திருக்கிறார் நிதி அமைச்சர் சவான். இதற்கு 'ஜவாஹர்லால் நேரு ரோஜ்கார் யோஜனா' என்று நாமகரணமும் செய்திருக்கிறார். அதிக வருமானம் உள்ளவர்களுக்கு வருமான வரியில் எட்டு சதவீதம் கூடுதல் வரி விதித்து அதன் மூலம் கிடைக்கும் 500 கோடி ரூபாயை இதற்கு ஒதுக்கியிருக்கிறார்.

வேலை வாய்ப்பைப் பெருக்குவதோ, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதோ தேர்தலுக்கு முன் பணத்தை வாரிவிடுவதாலோ, புடைவை வேஷ்டி விநியோகத்தாலோ நடக்கக் கூடியன அல்ல. மக்கள் ஏமாந்தால் வோட்டுக்கள் காங்கிரஸுக்கு விழலாம்; ஆனால் வறுமை ஒழியாது.

வேலை வாய்ப்பு பெருக, அடித்தளம் அமைக்க வேண்டும். மின் உற்பத்தி, போக்குவரத்து, தண்ணீர் வசதி போன்றவற்றை அதிகரித்து, முதலீடு பெருகச் செய்து, தொழிலகங்கள் உருவாக உதவ வேண்டும். பஜனைக்குப் பின் பட்டாணி சுண்டல் விநியோகிப்பது மாதிரி பட்ஜெட்டுக்குப் பின் வேலை வாய்ப்பை விநியோகம் செய்ய முடியாது. ஆக, இந்த ஐந்நூறு கோடி வரிப்பணமும் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் வெற்றி வாய்ப்பைப் பெருக்கிக் கொள்ளும் நோக்கில் விரயமாகப் போகிறது என்பதே உண்மை. கட்சிக்கு நன்கொடை கேட்டு வந்தது போக, கட்சிக்காக வரி விதிக்கவே ஆரம்பித்து விட்டார்கள்!

'பணக்காரர்களுக்குத்தானே வரிவிதிக்கிறோம்; ஏழைகளுக்குத்தானே உதவுகிறோம்' என்று கூறுவது போன்ற அர்த்தமற்ற வாதம் வேறு எதுவுமில்லை. பணம் படைத்தவர்கள் தொழிலதிபர்களாகவோ அல்லது வர்த்தகர்களாகவோ இருப்பார்கள். அவர்களுக்கு அளவாக வரி விதித்தால் கட்டி விடுவார்கள். அளவு மீறினால் வரி ஏய்ப்பு நடக்கும். கறுப்புப் பணப் பொருளாதாரம் சாமானியரைத்தான் பாதிக்கும். அல்லது, அதிகரித்த வரியை ஈடுகட்ட, உற்பத்தியாகிற, விநியோகமாகிற பண்டங்களின் விலையை உயர்த்தி விடுவார்கள். அப்போதும் பாதிக்கப்படப் போவது சாமானியன்தான். மேலும் கணிசமான வருமானம் உடையவர்களுக்கு அபரிமித வருமான வரி விதிப்பதால் சேமிப்பும் முதலீடும் குறையும். புதிய தொழில்கள் தோன்றுவதும் வேலை வாய்ப்புக்களும்தாம் பாதிக்கப்படும்.

பட்ஜெட்டுக்கு முன்பாகவே அரசின் கட்டுப்பாட்டில் உள்ள பல பொருள்களின் விலைகளை ஏற்றியாகி விட்டது. ரயில்வே பட்ஜெட்டில் சரக்குக் கட்டணங்களை உயர்த்தி மேலும் விலைவாசி உயர்வுக்கு வழி வகுத்தாகி விட்டது. இந்த பட்ஜெட்டில் மத்தியதர வகுப்பினர் வாங்கும் டி. வி., ரேடியோ, கைக்கடிகாரம், ஸ்கூட்டர் போன்ற பல சாதனங்களுக்கு வரிகளை அதிகரித்து விலை உயரச் செய்தாகிவிட்டது. எஃகு, அலுமினியம் போன்ற, தொழில் வளர்ச்சிக்கு அடிப்படைத் தேவைகள் மீதும் வரிகள் சுமத்தப்பட்டுள்ளன. போதாக்குறைக்கு அதிபயங்கர வில்லனாக 7337 கோடி ரூபாய் பற்றாக்குறை வேறு இருக்கிறது! அதாவது இந்த அளவுக்குப் புதிய நோட்டுக்கள் அச்சடிக்கப்பட்டு, பணப் புழக்கம் அதிகரித்து, விலைவாசிகள் விண்ணளாவும். அவதிப்படப் போவது நாம்தான்.

இந்தப் பட்ஜெட்டைவிடப் பெரிய துரதிர்ஷ்டம் என்னவெனில், மக்களைத் துன்புறுத்துகிற இந்தக் கொடிய பொருளாதாரக் கொள்கையை மாற்றி, ஆரோக்கியமான வழியில் திசை திருப்பி விடக்கூடிய நல்லதொரு எதிர்க்கட்சியோ, அது நாளை ஆட்சியைப் பிடிக்கக் கூடும் என்ற நம்பிக்கையோ நமக்கு இல்லாததுதான்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# டைஸன்: சேரியில் பிறந்த சாம்பியன்!

**ச**மீபத்தில் நடந்து முடிந்த உலகக் குத்துச் சண்டைப் போட்டியின் இறுதிச் சுற்றை டி.வி.யில் கண்டு ரசித்தவர்களுள் ஒருவர் பிரிட்டிஷ் பிரதமர் மார்கரட் தாட்சர். இப்போட்டியில் தோல்வியுற்ற புருனோவின் ரசிகர் தாட்சர்.

இருபத்தேழு வயது நிரம்பிய புருனோ ஆறடி மூன்றங்குல் உயரமும் 230 பவுண்ட் எடையும் உள்ளவர். தாம் போட்டியிட்ட முதல் பதினாறு (professional) பந்தயங்களிலும் தொடர்ச்சியாக வெற்றியே கண்ட இவர் 'டென்ஷன்' காரணமாக டைஸனிடம் தோற்கக் கூடும் என்று வல்லுனர்கள் எதிர்பார்த்து முன்கூட்டியே கூறியிருந்தார்கள்.

**உ**லக சாம்பியன் டைஸன் தமது இளமைப் பருவத்தில் அமெரிக்காவில் [illegible]



* இறுதிப் போட்டியில் டைஸன் புருனோவைத் தாக்குகிறார்.

[illegible] வளர்ந்தார். தந்தையை அறியாத அவர், தாயின் பராமரிப்பில், வளர்ந்தார். ஆரம்ப நாட்களில் கூச்ச சுபாவத்துடன் ஒதுங்கியே வாழ்ந்தார். சேரியில் இருந்த மற்ற சிறுவர்கள் அவரைச் சீண்டியும் துன்புறுத்தியும் வந்தனர். ஒரு நாள், அவர் பிரியத்துடன் வளர்த்து வந்த புறாவை ஒரு சிறுவன் திருட முயன்றதால் அவனைச் செம்மத்தியாக அடித்து நொறுக்கிவிட்டார் டைஸன். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு இரவோடு இரவாக டைஸனின் குணம் மாறியது. திருடுவது, பிக்பாக்கெட் அடிப்பது, தயங்காமல் எதிராளியை அடித்து நொறுக்குவது என்று ஆரம்பித்து முழு நேரப் பேட்டை ரெளடி ஆனார்.

சிறுவர்களுக்கான சீர்திருத்தப் பள்ளியில் சேர்க்கப்பட்ட டைஸன், 'எல்ம்வுட் காட்டேஜ்' என்ற அப்பள்ளியில்தான் பாபி ஸ்டுவர்ட் என்ற குத்துச் சண்டை வீரரைச் சந்தித்தார். ஸ்டுவர்ட் சீர்திருத்தப் பள்ளியின் ஆலோசகர்.

தமக்குக் குத்துச் சண்டையில் பயிற்சியளிக்கும்படி ஸ்டுவர்ட்டிடம் டைஸன் கேட்ட போது, 'நீ படிப்பில் முன்னேற்றம் காண்பித்தால்தான் குத்துச் சண்டை பயிற்சி' என்று கூறிவிட்டார் அவர். அது வரையில், சில ஆசிரியர்களால் 'மூளை வளர்ச்சிக் குன்றியவர்' என்று கருதப்படும் அளவுக்கு முரட்டுத்தனத்துடனும் [illegible] பின்தங்கியும் இருந்த டைஸன், ஸ்டுவர்ட்டின் நிபந்தனையை ஏற்றுக் கொண்டு படிப்பில் அதிகக்கவனம் செலுத்த ஆரம்பித்தார்.

**இ**தற்குப் பிறகு ஸ்டுவர்ட்டின் உதவியுடன் டி' அமாடோ என்ற பிரபல குத்துச் சண்டைப் பயிற்சியாளரின் பள்ளியில் முழு நேர மாணவராகச் சேர்ந்து பயின்றார் டைஸன். இன்று உலக சாம்பியனாக டைஸன் விளங்க வித்திட்டவர் டி' அமாடோ. ஆரம்பத்தில் டி' அமாடோவிடம் அவநம்பிக்கையும் பயமும் கொண்டிருந்தார் அவர். ஆனால் டி' அமாடோ டைஸனைத் தமது அன்பால் வென்றார். டைஸனின் அம்மா கான்ஸர் வந்து இறந்தபோது அச்சிறுவனின் 'கார்டியன்' பொறுப்பை ஏற்றார் டி'அமாடோ.

ராபின் கிவன்ஸ் என்ற நடிகையை 1986 இல் மணந்த டைஸன் 1988 இல் அவரை நியூ யார்க் நகரில் மீண்டும் மணந்தார். ''ஐம்பது மாநிலங்களிலும் திருமணம் செய்து கொள்ள நாங்கள் விரும்புகிறோம்'' என்கிறார் குடிப் பழக்கமோ போதை மருந்துப்பழக்கமோ இல்லாத டைஸன்!

— குண்டுமணி

படம் — நன்றி:

ஸ்போர்ட்ஸ்டார்.

வட்டமேஜை

# ஏக்கம்தான் ஏற்படுகிறது!

• கோஷ்டிப் பூசலில் சிக்கித் தவிக்கிறார். கட்டுரையைப் படிக்கும் போது, 'இந்த அரசியல்வாதிகள் குடுமிப்பிடிச் சண்டைக்குக் கொடுக்கிற முக்கியத்துவத்தை நிறுத்தி விட்டு நம் தேசத்தின் பல்வேறு பிரச்னைகளையும் பொது மக்களின் நலனையும் மனத்தில் கொண்டு உழைக்கக்கூடாதா?' என்கிற ஏக்கம்தான் என் போன்றவர்களின் நெஞ்சத்தை ஆட்கொள்கிறது

பாபநாசம். — ப. மணிமுடி.

• ராஜீவ் காந்தி வனவாசம் சென்று விட்டால் எல்லாம் சரியாகி விடும். சரி, அடுத்து இந்தியாவின் நிலைஎன்னஎன்பதைக் கொஞ்சம் கூட சிந்திக்காமல் 'ராஜீவ் காந்திக்கு வனவாசம் தேவை' என்று கூறும் ராமின் கூற்று அச்சத்தையும், வியப்பையும் அளிக்கிறது.

குடந்தை — ஆர். ஸ்ரீதரன்

• 'இந்து' பத்திரிகை துணையாசிரியர் ராம் அவர்களின் கவலையான, பயனுள்ள பேட்டியைப் படித்து மகிழ்ந்தோம். ''இந்நிலை நீடித்தால் ராஜீவ் தோற்றுத்தான் போவார்'' என்றுராம்கூறியுள்ளதை, ராஜீவ் அவர்களின் உண்மையான நண்பர்கள் அவரது கவனத்திற்குக் கொண்டுவர வேண்டும். ராஜீவ் தன்னை மாற்றிக் கொள்ளாவிட்டால் 1977 நாடாளுமன்றத் தேர்தலில், காங்கிரஸ் கட்சிக்கு ஏற்பட்ட தோல்விகள், வரும் தேர்தலில் மீண்டும் ஏற்படலாம்.

ஆலடிஆர். வெள்ளக்கால்,
— இரா. கந்தையா.

• எந்தப் பத்திரிகையும் கண்டு கொள்ளாத 'என். டி. ஆரின் எதேச்சாதிகாரப் போக்'கினைக் கண்டித்துத் தலையங்கம் எழுதியதானது பத்திரிகையுலகில் கல்கியின் தனித்தன்மையை மீண்டும் உணர்த்தியதாக இருந்தது.

ஸ்ரீரங்கம். ஏ.எஸ். முரளி.

• கலர் டி.வி. பரிசுத் திட்டத்தை அறிவித்து எங்களைத் தொடர்ந்து டி.வி. பார்க்கும்படி செய்துவிட்டீர்களே! பரிசுக்காக உங்கள் வாசகர்களை இப்படி ஒரு சோதனைக்கு ஆளாக்கலாமா?

ராமநாதபுரம். ஜெயந்தி

அசந்துட்டேன்! டி.வி யை பற்றிக் கிழி கிழி என்று எழுதியும், பேசியும் வருகிற இந்த நேரத்தில்..... நீவிர் கலர் டி.வியைப் பரிசு பெற போட்டி வைத்திருக்கிறீர்கள்! உமது அசுரத்தனத்திற்குக் கிட்டே யாரும் வரமுடியாது.

புதுவை. 5 கே.எஸ். மாறன்

(டி.வி. நிகழ்ச்சி பற்றிய விமர்சனங்கள் அவற்றைக் கடுமையாக விமர்சிப்பனவாகவும் இருக்கலாம் என்பதை மறந்து விட்டீர்களே! — ஆசிரியர்)

• ரொம்ப நாளைக்கு அப்புறம் எம்புருஷன்தான் எனக்கு மட்டும் தான் படத்தை மனம்திறந்து பாராட்டி விமர்சனம் எழுதிவிட்டீர்களே! திருஷ்டி சுற்றிப் போட வேண்டும்!

சென்னை — 52. அ. ஜமால் [illegible]




• [illegible] தலைமுறை சிறுகதை திப்புவின் வேதனையையும், அதற்கு மருந்திட்ட சுகத்தையும் ஒரே சமயத்தில் தந்தது. சிறுகதையிலேயே, கதாபாத்திரங்களை நம் கண் முன் கொண்டு நிறுத்தியது கதாசிரியரின் சிறப்பு.

தோப்புத்துறை தே. ஆனந்த்.

• 'மடமையைக் கொளுத்துவோம்'— அநுராதா ரமணனுடைய ஒவ்வொரு வார்த்தையும் எத்தனையோ பெண்களின் மனத்திற்குள் குமுறிக் கொண்டிருக்கும் நிதர்சனமான உண்மைகளே!

புதுச்சேரி—12. புதுவை ராஜமுனி

• அநுராதா ரமணனின் கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. காரணம்: அனேகம் பெண்கள் தங்களை அழகுப் பதுமைகளாக மற்றவர்கள் கருதுவதிலேதான் தங்களின் பெருமை இருப்பதாக நினைக்கிறார்கள். தங்கள் அழகை மிகைப் படுத்திக் காட்டிக் கொள்ளாமல் இயற்கை அழகோடு இருக்க அவர்கள் விரும்புவதில்லை. பெண்களே தங்கள் அழகை முதன்மையாகக் கருதாமல் இருக்கும் நிலையில் தான் ஆண்களாலும் அவ்வாறு இருக்க முடியும்.

தாராகரம் மா. இராசா

• சாராய வருமானம் வேண்டாம் என மறுக்கும் கருணாநிதி பற்றிய கார்டூனைக் காணும் போதே, தமது முந்தைய ஆட்சியில் ஒரு புதிய தலை முறைக்கே சாராயத்தை அறிமுகப்படுத்தி வைத்தவரும் இதே கருணாநிதி தானே என்றஎண்ணமும் கூடவே எழுந்ததைத் தவிர்க்க முடியவில்லை?

காட்டூர் எஸ். அருள் மொழி

• கல்கி 12.2.89 இதழில் 'ஷாக் அளித்த செய்தி' என்ற கட்டுரையில் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை எல்லா வீடுகளிலும் உள்ள மின்சார உபகரணங்கள் மற்றும் ஒயரிங் ஆகியவற்றைப் பரிசோதிக்க வேண்டிய பொறுப்பு எலக்ட்ரிகல் இன்ஸ்பெக்டருடையது என்ற வாசகம் சரியன்று. வீடுகளிலுள்ள மின்சாதனங்களையும், அவற்றுடன் இணைந்த ஒயரிங்கையும் பரிசோதிக்க வேண்டிய பொறுப்பு, மின்சார வாரியத்திற்குட்பட்டதாகும். இதற்கென்று மின் வாரியம் தனியாக ஆய்வுப் பொறியாளர்களை நியமித்து ஆய்வு மேற்கொண்டு வருகின்றது. ஆய்வு செய்ய மின் வாரியம் மூலம்தான் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

சென்னை — 2.

இல. அ. சீனிவாசன்,
தமிழக அரசு தலைமை
மின் ஆய்வாளர்.

(இக்கடிதம் தொடர்பாக, சம்பந்தப்பட்ட கட்டுரைக்குத் தகவல்கள் அளித்த, ஓய்வு பெற்ற மின் துறைத் தலைமைப் பொறியாளர் எஸ். ஜி. நாராயணசாமியிடம் கேட்டபோது, பரிசோதனைப் பணியை மின்வாரியம் செய்தாலும் அது செய்யப்பட்டு வருகின்றதா என்பதைக் கவனிக்கும் பொறுப்பு ஐ. இ. விதி 46—ன்படி, எலக்ட்ரிகல் இன்ஸ்பெக்டருக்கு உண்டு என்று உறுதியாகக் கூறி விட்டார். — ஆ-ர்)



தமிழ்த் திரைக்கு ரொம்ப வித்தியாசமான படம்தான். இருக்காதா பின்னே? மலையாள மாடமாளிகை கூடகோபுரச் சூழலில் தமிழ் பேசி நம்மவர்களும் மலையாளிகளும் ஒன்று கூடி உழல்வது வித்தியாசம் இல்லையோ? அதற்காக உகப்பி எடுக்கிற மாதிரி புதுசாய் ஏதாவது இருக்கிறதா என்றால் 'ஸாரி' சொல்ல வேண்டியதுதான். கதை மலையாள சென்ட்டிமென்ட், மலையாள (மூட) நம்பிக்கைகள், மலையாள ஹாஸ்ய ரசனைகள் அடிப்படையில் பின்னப்பட்டிருப்பதால் — மன்னிக்க வேண்டும்; நமக்கு அத்தனை ஒட்டுதல் ஏற்படவில்லை.

ப்ளஸ் பாயின்ட் கார்த்திக் — குஷ்பூ காதல் சேட்டை. இளமைத் துள்ளலுக்கு ஒரு கார்த்திக். தன் சிநேகிதப் பட்டாளங்களிடம் அவர் தன் மாமன் மகளைச் சந்தித்ததையும் அவள் தன் காதலுக்கு ஏங்கித் தவம் கிடப்பதாயும் அளக்கிறாரே அந்த அளப்பை விஷுவலில் வேறு காட்டிக் கிளுகிளுப்பூட்டும் பாசிலுக்கு நன்றி — அது அட்டகாசம். முறைப் பெண்ணுடன் உதட்டுறவு கொண்டே தீர்வது என்ற வெறியில் பாத்ரூமுக்குள் குஷ்பூவுடன் புகுந்து உள் தாழிட்டுக் கொண்டு பலாத்காரத்தில் இறங்க, குஷ்பூ கூச்சல் எழுப்பி வீட்டை (ஏறக்குறைய ஊரே) கூட்ட, கார்த்திக் கையும் மெய்யுமாய்ப் பிடிபட, தலைக்குத் தலை (வடிவுக்கரசி உச்சம்) அவர் தலையை உருட்ட, வியர்த்து விறுவிறுத்து அதிர்ந்து குழம்பிப் போய் அவர் வீட்டை விட்டு வெளியேறும் ஆயத்தத்தில் இறங்குவது தொடுகிறது.

குஷ்பூ — பள்ளிச் சிறுமியின் பாந்தம், மனசுக்குள் ஆசை, அதே சமயம் வீட்டுக்குப் பயம். கார்த்திக் அவரிடம் அதட்டுப் போடும் ஒவ்வொரு சமயமும் ஒரு மரியாதைத் தொலைவில் விலகி நின்று, 'என்ன?' என்று மருட்சி விழிப்பில் கேட்கும் பாவம் மனசுக்குள் பரவசமாய் நிறைகிறது.

கார்த்திக்கின் தாய் ஜெயபாரதியிடம் நடிப்பின் முதிர்ச்சி. 'அம்மா, என்னண்டை பேச மாட்டேன்னு மட்டும் சொல்லிடாதேம்மா', என்று கார்த்திக்தான் தன் உருக்கவித்தையைக் காட்டப் பார்க்கிறார் என்றால், அவரை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு 'பின்னே ஏண்டா அப்படி நடந்துகிட்டே?' என்று கண்ணீரில் நனைக்கும் போது, மரியாதை பெறுகிறார்.

அது என்ன இழவு நகைச்சுவையோ! வீட்டு வேலைக்காரியைச் சின்னப் பெரியவர் வி.கே.ஆரும் வேலைக்கார ஜனகராஜும்

# வருஷம்.16

போட்டி போட்டுக் கொண்டு டாவு கட்டுவதும் ஒருத்தரை ஒருத்தர் மாட்டி விடப் பார்த்து அவமானப்படுவதும் அன்சகிக்கபிள். நடுவிலே பதி சொல் தாண்டாத பத்தினியாய்ச் சுகுமாரி காட்டும் அப்பாவித்தனம் ரசிக்கும்படி இருக்கிறது.

இப்படியொரு பாசமிக்க பழங்கால மனுஷர் எங்கேயோ இருக்கிறார் இருக்கிறார் என்ற உணர்வை ஏற்படுத்துகிறார் பூர்ணம். அரைகுறையல்ல; பூரணம்.

நடிப்புக்காகப் பார்க்கலாம்; நாடகத்துக்காக அல்ல.

— பி. எஸ். எஸ்.




# விக்ராந்த்

## நம்பகமான டயர்

**இந்தியாவின் முதல் டிரக் ரேடியல்களைத்
தயாரித்த தொழில் நுட்பத்துடன்**

காலம் கடந்த கடும் மழைகள், சாலைகளில் எதிர்பாராத வெள்ளங்கள், மண்சரிவுகள், பல காத தூரம் குண்டு குழிகள் — ஆம் இந்தியச் சாலைகளில் எதிர்பாராத-வற்றை எதிர்பார்க்கலாம். இத்தகைய எதிர்பாராத சவால்களை நேரிடுவதற்கென்றே, ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர்களை டன் கணக்கான கனம் ஏற்றிய டிரக்கில் எளிதாகக் கடப்பதற்கென்றே பிரத்தியேகமாக உருவாக்கப்பட்டுள்ள டயர் விக்ராந்த். இந்தியச் சாலைகளில் ஓட்டுவதற்காகவே நவீன தொழில் நுட்பத்தால் வலுப் படுத்தப்பட்டு வரும் நம்பகமான டயர்.

**உலகின் முதன்மையான வேக ஓட்ட டயரின் தொழில் நுட்பம்**

ஒவ்வொரு விக்ராந்த் டயரின் பின்னிலும் இங்கிலாந்தின் ஏவான் நிறுவனத்தின் மேம்பட்ட தொழில் நுட்பம் உள்ளது. இந்நிறுவனம் மோட்டார் வண்டிகளின் ராஜாவான, உலகின் முதன்மையான ஓட்டப் பந்தய டயர்கள் பொருத்தப்பட்ட ரோல்ஸ்-ராய்ஸின் தேவைகளைச் சந்திக்கும் பெரிய நிறுவனமாகும். விக்ராந்தின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி இலாகா ஏவான் தொழில் நுட்பத்தைப் பின்பற்றி இந்தியச் சாலைகளுக்கு ஏற்றபடி செயல்திறன் வாய்ந்ததாக டயர்களைத் தயாரிக்கிறது.

**இந்தியாவின் முதல் டிரக் ரேடியலைத் தயாரித்த தொழில் நுட்பம்**

விக்ராந்தின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி இலாகா டிரக் ரேடியல்களைப் பற்றி ஆய்ந்ததின் விளைவு இங்கிலாந்தின் மார்க்கெட்டினை வென்ற மிகமிக வலிமை வாய்ந்த ஒரு டயராகும். இதன் காரணமாக இங்கிலாந்துக்கு டிரக் ரேடியல்களை ஏற்றுமதி செய்த முதல் கம்பெனி விக்ராந்த் எனப் பெயர் பெற்றது.

**விக்ராந்த் — புதிய வண்டியில் பொருத்தப்படும் ஒரிஜினல் பாகம்**

விக்ராந்தின் செயல்திறன் நாடு முழுதும் போக்குவரத்துத் துறையில் நம்பகரமானதாக நிரூபிக்கப்பட்டுள்ளது. முன்னணி நிறுவனங்களான டெல்கோ, மற்றும் அசோக் லேலண்டு வண்டிகளில் இது ஒரிஜினல் பாகமாக பொருத்தப்படுகிறது. பெரும்-பான்மையான மாநில போக்குவரத்து நிர்வாகங்களின் பஸ்களில் பல்லாயிரக்-கணக்கான மக்களை நாடு முழுவதும் ஏற்றிச் செல்கிறது.

எனவே, செயல்திறன் நிரூபிக்கப்பட்டு, நவீன தொழில் நுட்பத்தைப் பின்பற்றி அமைக்கப்பட்டு, எதிர்பாராத சவால்களை நேரிட வரும்போது நீங்கள் நம்பக் கூடியதாக இருக்க வேண்டிய டயர் உங்களுக்கு வேண்டும் எனின், எந்த டயரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை இப்போது அறிவீர்கள்!



**VIKRANT**

நம்பகமான டயர்
பொறுப்பான கம்பெனி

# சுக போகத் தீவுகள்

9

“பூ [illegible]

குரலில் அழைத்தாள், குரலை விடவும் மெல்லிய அந்தப் பெண்.

ஒரு காம்பவுண்டுச் சுவருக்குள் இருந்த மூன்று போர்ஷன் வீடுகளில், மூன்றாவதாகச் சற்று ஒதுங்கினாற் போன்ற வீடு அது. மூன்றுக்கும் பொதுவான குளியல் அறைகள் மற்றும் டாய்லட்டுகள் அந்த வீட்டுக் கதவுக்கு நேராகவே அமைந்திருந்தது. கதவைத் தட்டிய பெண், தட்டுதலுக்குத் தன் கை நடு விரலைப் பயன்படுத்தினாள். கை, வலி எடுத்திருக்கக் கூடும். ஆகவே தட்டுவதை நிறுத்தி விட்டு, “டீச்சர், டீச்சர்” என்று மட்டும் அவள் குரல் கொடுத்தாள்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு, கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தாள் அந்த டீச்சர். உப்பி, சிவந்திருந்த கண்களும், கலைந்த கேசமும் அவள் உறக்கத்திலிருந்து எழுந்து வந்ததை உணர்த்தின.

“வா... செண்பகம்” என்று கதவைத் தட்டிய பெண்ணை அழைத்தவாறே தெருவைப் பார்த்தாள் கமலா டீச்சர். தெருவில் ஒரு பாதி விழுந்திருந்த வெயிலைக் கொண்டு நேரத்தை நிதானிக்க முயன்றாள் அவள்.

“டைம் என்னடி இருக்கும்?”

“மூணே முக்கால் டீச்சர்.”

“கடிகாரத்தைப் பார்த்துச் சொல்கிற மாதிரி, கரெக்டா சொல்றே?”

“வீட்டை விட்டுச் சரியா மூன்றரை மணிக்குப் புறப்பட்டேன், டீச்சர். நடந்து வர்றதுக்குப் பதினைந்து நிமிஷம். அப்போ மூணே முக்கால் தானே இருக்கும்?”

“சமர்த்துத்தான். வாடி உள்ளே...”

செண்பகம், ஓர் ஆச்சரி...க் குறி மாதிரி மெலிந்த தன் உடம்பை...யும், எலி வாலைப் போன்ற ஜடையையும் ...மந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். “பால் வாங்கி வரட்டுமா, டீச்சர்?” என்று ...வாதீனமாகச் சொல்லியபடி, அடுப்படி...யில் இருந்த எவர் சில்வர் குவளையை எடுத்...தாள்.

கமலா, ஆணியில் மாட்டியிருந்த கைப் பையை எடுத்து, சில்லறையைத் திரட்டி, ...ள்ளங்கையில் வைத்துக் கொண்டு எண்...ணத் தொடங்கினாள்.

“எவ்வளவு வேணும்?”

“ரெண்டு ரூபாய் வேணும் டீச்சர்.”

“அவ்வளவு என்னத்துக்கு?”

“பால், சர்க்கரை, காப்பிப் பொடி எல்லாம் வாங்கணுமே. வீட்டில் ஒன்றுமே இல்லையே...”

“இன்னும் ஒருநாள் தானே? நாளைக்குத் தேதி முப்பது. ஒண்ணாம் தேதிதான் சம்பளம் வந்துடுமே.”

“நீங்க இந்த மாதிரி மாசக் கடைசியிலே கஷ்டப்படறதைப் பார்க்க மனசுக்குச் சங்கடமா இருக்கு டீச்சர். கொஞ்சம் பணம் சேர்த்து வச்சா என்ன?”

**பிரபஞ்சன்**



கமலாவுக்கு அவளை மீறிக் கொண்டு சிரிப்பு வந்து விட்டது. விடாமல் சிரித்தாள். கண்ணில் நீர் வரும் வரை சிரித்துக் கொண்டேயிருந்தாள். செண்பகத்தின் முகம் விழுந்து விட்டது. டீச்சரிடம் சிறந்த விஷயம் ஒன்றைச் சொல்ல முயன்று, அது சிரிக்கும்படியான விஷயமாகி விட்டதே என்று வெட்கித்துப் போனாள், அந்த எட்டாம் வகுப்பு மாணவி.

சிரித்து ஓய்ந்த கமலா சொன்னாள்.

''அடி அசடே! வாங்குகிற சம்பளம் உன்னைப் பிடி என்னைப் பிடின்னு இருக்கும். இதில் எப்படிச் சேர்த்து வைக்க? வீட்டு வாடகை, மின்சாரம், ரெண்டு வேளை சாப்பாடு இதுக்கும் கட்டி வரல்லே. ஏதோ நாலு டியூஷன் எடுத்தா கொஞ்சம் காசு பெயரும்னு நினைச்சா, எல்லாம் உன்னைப் போலவே, ஏதோ சொல்வாங்களே வசனம், இனம் இனத்தோட சேரும்னுட்டு, அது மாதிரி சம்பளம் கொடுக்க ஐவேஜி இல்லாத பொண்ணுங்களா வந்து சேர்ந்ங்க... இலவசமா 'அட்வைஸ்' வேறே.. அரசாங்கம் சொல்ற புத்திமதியைக் கடன் வாங்கி; தேவைக்கே சம்பளம் கொடுக்க வக்கத்த அரசாங்கம், சேமியுங்கோ, சேமியுங்கோன்னு என்னை மாதிரி ஏழை பாழைகளை அவமானப்படுத்தறது போறாதுன்னு நீ வேறே.. அது சரி, எவ்வளவு வேணும்னு கேட்டே... ரெண்டு ரூபாயா? அவ்வளவு சில்லறை தேறல்லையேடி. என்ன பண்ணலாம்?''

செண்பகத்தின் முகம் கவலையால் விழுந்து போயிற்று.

''உங்களுக்குக் காப்பி வேணுமே டீச்சர்.''

''காப்பி இல்லைன்னா என்ன, குடியா முழுகிடும்? அல்லது செத்துப் போயிடுவேனா?''

செண்பகம் அழும் நிலைக்குப் போய் விட்டாள். இந்த டீச்சர், இன்னொரு டீச்சரைப் போலவா இருக்கிறார்! படிக்கிற பெண்கள் மீதுதான் எவ்வளவு அன்பு? பெண்கள் படித்துச் சொந்தமாகக் காசு சம்பாதித்து, தன் காலில் நிற்கிற நிலை என்று உருவாகிறதோ, அன்றுதான் அவர்களுக்குச் சுயமரியாதையும், ஆண்களிடமிருந்து மரியாதையும் கிட்டும் என்கிற டீச்சர் இவள். தன்னை அண்டிப் பிழைக்கிற பெண்ணிடம் ஆண், எவ்வாறு நடந்து கொள்வான் என்று வகுப்பில் சொல்வாள் அவள். அனாவசியமாக மற்ற ஆண் டீச்சர்களுடன் சேர்ந்து அர்த்தமற்றுக் கெக்கே பிக்கே என்று சிரிக்காத டீச்சர் இவள். கொண்டை, குடை போன்ற ஆசிரியைகளுக்கே உரிய லட்சணங்கள் எதுவுமின்றி, அடுத்த வீட்டு அக்கா மாதிரி எளிமையாகப் பள்ளிக்கூடம் வருகிற டீச்சர் அவள்.

''டீச்சர்... கோவிச்சுக்கலைன்னா ஒன்று சொல்லட்டுமா?''

''சீ.. எனக்கு எப்பமே கோபம் வந்து நீ பார்த்திருக்கே. சும்மா சொல்லு.''

''நான் வேண்ணா எங்க வீட்டுக்கு ஒரு நடை போய், ஒரு தம்ளர் காப்பி கொண்டு வரட்டுமா? பாவம், காலைலே சாப்பிட்டிருப்பீங்க. அதோட, ராத்திரிக்குத்தானே சாப்பிடுவீங்க. இடையில், ஒரு கப் காப்பி கூட இல்லாமே எப்படி டீச்சர்?''

கமலாவின் முகம் சிவந்தது. சில்லறையை ஒரு கையில் வைத்திருந்தவள் அதை மறு கையில் மாற்றிக் கொண்டாள். அவள் விரல்கள் நடுங்கின போல் தோன்றியது. உதடுகள் கோணின. கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் சிந்தியது. சில்லறையைப் பைக்குள் போட்டு அதை மீண்டும் ஆணியில் மாட்டி விட்டு, முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''இப்படி சொல்ல நீ ஒருத்தியாச்சும் எனக்கு இருக்கியே.. அதுவே போதும்'' என்றவள், சற்று நிதானித்தாள்.

''ஒண்ணு பண்ணுவோமா? கூடா ஏதாச்சும் பண்ணி ராத்திரிக்குச் சாப்பிடலாம்னு தோணுது. மத்தியானம் வடிச்சதையே ராத்திரிக்குப் போட்டுக்கலாம்னு நினைச்சிருந்தேன். சோம்பேறிதனம்தான். நீயும் வந்துட்டே! போய், மூலைத் தெரு கடையிலே, கொஞ்சம் பருப்பு, வெங்காயம், பச்சை மினகாய், ரெண்டு தக்காளிப் பழம், ஏதாவது ஒரு காய் வாங்கியாந்துடு. கமலா டீச்சர்



கணக்குன்னு சொல்லு. சம்பளம் ஒண்ணாந் தேதி வந்துடுமாம், நேரில் வந்து கொடுப் பாங்கன்னு சொல்லு..''

செண்பகம் பையை எடுத்துக் கொண்டு மன வருத்தத்துடன் கடைக்குக் கிளம்பி னாள். அவள் வரும் வரை சும்மா இருக்க வேண்டாமே என்று கட்டுரை நோட்டை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள் கமலா. 'விடுமுறையில் நீங்கள் சென்று வந்த ஊரைப் பற்றி' வியாசம் எழுதச் சொல்லி யிருந்தாள் அவள். அவள் வகுப்பில் மொத் தம் நாற்பது பெண்கள் படித்தார்கள். நாற் பதில் முப்பத்தேழு பெண்கள் மகாபலிபுரம் போனதாகவே எழுதியிருந்தார்கள். கமலா, மாதிரிக்கு மகாபலிபுரத்தைச் சொல்லிக் கட்டுரை எழுதும் முறையை விளக்கிக் கற்றுக் கொடுத்திருந்தாள். கொஞ்சமும் கற்பனையும், உண்மையும் இன்றி மாணவி கள், அவள் சொல்லித் தந்ததையே திருப்பி எழுதியிருந்தார்கள்.

அவள் மனம் சலித்தது. கற்பனைதான் இல்லை. மொழி அறிவு கூட அந்தக் குழந்தை களிடம் இல்லையே என வருத்தமாய் இருந் தது. நகர சபை நடத்தும் பள்ளிக் கூடத்துக் குழந்தைகள் அவர்கள். மிக ஏழைமையும், அதனினும் அதிக வித்தியாசம் இல்லாத கீழ் மத்திய தர வகுப்பையும் சேர்ந்தவர்கள். வீடு அவர்கள் படிப்புக்கு அனுசரணையாக, இருப்பதில்லை. பெற்றோர்களுக்கு அவர் கள் கவலையில் குழந்தையைக் கவனிக்க நேரம் இருப்பதில்லை. குழந்தைகளுக்கோ, தாங்கள் எதற்காகப் படிக்கிறோம் என்றே தெரிவதில்லை.

அந்த நேரத்தில்தான், வாசலில் நிழலாடி யது.

எட்டிப் பார்த்தாள் கமலா. இருவர் நின் றிருந்தது தெரிந்தது.

கமலா எழுந்து வந்து, வந்தவர்களை அறியாத முகபாவனையோடு, ஆனால் மரியாதைக்கு ''வாங்க'' என்றாள்.

வந்தவர்களில் பெண்மணி சொன்னாள்.

''நான் கோகிலா. இவர் கி ரு ஷ் ண மூர்த்தி.''

''உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே...''

''சினிமாவில் பார்த்திருப்பீர்கள்.''

''ஓ... அந்தக் கோகிலாவா நீங்க? வாங்க, உள்ளே வாங்க..''

கமலா கூடத்தில் பாயை விரித்து அவர்களை அமரச் செய்தாள்.

''உங்களைப் பற்றி நிறைய கேள்விப்பட் டிருக்கேன். அரசியலில் கூட நீங்கள் தீவிர மாக இருப்பதாகச் சொல்கிறார்கள்'' என்றாள் கமலா. பிறகு கிருஷ்ணமூர்த்தி யின் பக்கம் திரும்பி, ''இவர் யாரென்று சொல்லவில்லையே...'' என்று வின வினாள்.

''இவர்தான் இப்போது தெய்வநாயகத் தின் பி.ஏ.வாக இருக்கிறார்.''

''ஓ...'' என்று ஆச்சர்யத்தால் கமலாவின் கண்கள் விரிந்தன.

''உங்களுக்குத் தெய்வநாயகத்தைத் தெரி யுமா?'' என்று கேட்டான் கிருஷ்ணமூர்த்தி.

''யாருக்குத்தான் அவரைத் தெரியாது. பெரிய பிரமுகர் ஆயிற்றே அவர்.''

''சௌக்யமாய் இருக்கிறீர்களா, கமலா?'' என்று அவசரமாய் இடைமறித் தாள், கோகிலா.

''என் சௌகர்யத்துக்கென்ன, நான் நன் றாகவே இருக்கிறேன்..'' என்று சொன்ன கமலாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள், கோகிலா. உண்மையில் அவள் நிறைவோடு தான் அந்த வார்த்தைகளைச் சொன்னதா கப் பட்டது அவளுக்கு. கோகிலாவின் மனம் சுருங்கிற்று.

''மெட்ராஸ் பக்கம் வருவதே இல்லை போல் இருக்கிறது, இப்போதெல்லாம்.''

''ஆமாம், கோகிலா. பயணம் செய்யற தில் மனம் சலிச்சுப் போய் விட்டது. எங்கு போனாலும் நாம் நம்மைத்தானே கொண்டு போறோம். புதுசு புதுசா இடங்களைப் பார்க்கிறோம். புதுசா பார்க்கிற போது, கண்ணும் மனசும் புதுசை மட்டுமே ஒத்துக் கிறதா? பழசோடு சேர்த்து வச்சுத்தானே ஒப்பிட்டுப் பாக்கிறது? அப்புறம் எதுக்குப் பயணம் எல்லாம். தவிரவும், மனுஷர்கள் எங்கு போனால்தான் என்ன, எந்த உச்சா ணிக் கொம்பில் இருந்தால்தான் என்ன? எந்த பாஷையைப் பேசிக்கிட்டு, என்னத் தைச் சாப்பிட்டுக்கிட்டு இருந்தாதான் என்ன? மனுஷங்க மனுஷங்கதானே? நான் இன்னும் என்னையே பார்த்துத் தீரலை. அப்புறம் எதற்கு மற்றவங்களைப் பார்க் கிறது?''

ஆரஞ்சுத் தோல் உரிந்து, சுளை சுளை யாக வருவது மாதிரி, எளிமையாகவும், அழுத்தமாகவும், ஆனால் அதே சமயம் இயல்பாகவும் பேசிக் கொண்டிருந்தாள் கமலா. கிருஷ்ணமூர்த்தி, அவர்கள் உரை யாடலில் எந்த இடத்தில் எங்கு பங்கு கொள் வது என்று தெரியாமல் அமர்ந்திருந்தான்.

''அம்மா சௌக்கியமா?'' என்றாள் கோகிலா.

''பரவாயில்லையே... என்னைப் பற்றி, எல்லாம் தெரிந்து வைத்திருக்கிறீர்களே.. என் அம்மாவைப் பற்றியெல்லாம் யார் உங்களுக்குச் சொன்னது?''

''தெய்வநாயகம்தான் சொன்னார்.''

---

நோயாளி: என்ன டாக்டர்... தலைவலி, ஜலதோஷம்னாக் கூட அட்மிட் ஆகச் சொல்றீங்க...?''

டாக்டர்: என்ன செய்யுறது...? பெட் காலியாக் கிடக்கே...!''

— சமுதி எஸ். சேதுராமன்.












— எஸ். முகம்மது யூசுப்.

''அப்படியா? அம்மா நன்றாகத்தான் இருக்கிறாள். அந்தப் பிடிவாதம் அப்படியேதான் இருக்கிறது. நான் தனியாக வாழக் கூடாதாம். கணவனிடம் போய்த்தான் ஆக வேண்டுமாம். கணவன் கல்லாகத்தான் இருக்கட்டுமே, மனைவி என்பவள் அவனை வழிப்பட்டுத்தான் ஆக வேண்டுமாம். நான் கணவனைப் பிரிந்து இருப்பது அவளுக்கு வருத்தம். என்ன பண்ணுவது? இந்த நிலை எனக்கு மட்டும் சந்தோஷம் தருகிறதா? என்ன செய்வது கோகிலா, தனித் தனியா ஒவ்வொருத்தருக்கும் மனசும் மூளையும் கொடுக்கப்பட்டிருக்கிறதே!''

கோகிலா வீட்டைக் கண்களால் துழாவினாள். சுண்ணாம்பு மறைந்து, அழுக்கும் கறையும் கொண்டதாய் இருந்த சுவரும், சுருட்டி வைக்கப்பட்ட பாயும், அத்தியாவசியப் பாத்திரங்களுமே கொண்ட அந்த வீடு, வறுமையை உரத்த குரலில் முழங்கிக் கொண்டிருந்தது.

கோகிலா விடைபெற்று வாயிலைக் கடக்கும் போது, செண்பகம் காய்கறிப் பையுடன் வந்தாள். பையைச் சமையல் உள்ளில் போட்டு விட்டு, ''யாரு டீச்சர் அவங்கன்னாம்?'' என்றாள்.

''அந்த அம்மா தாண்டி கோகிலா. நீ அவங்க நடிச்ச படம் பார்த்திருக்க மாட்டே. அந்தக் காலத்து நடிகை. ரொம்ப நல்லா நடிப்பாங்க. இப்போ அரசியல் பண்ணறாங்க. அந்தப் பையன், தெய்வநாயகம்னு ஒரு தலைவர் இருக்காரில்லையா, அவரோட பி.ஏ.வாம்.''

''ஹை... நடிகையா டீச்சர்! நான் பாருங்க, லேட்டா வந்து தொலைஞ்சுட்டேன்.''

''அவங்களைப் பார்த்து உனக்கு என்ன ஆகப் போகுது?''

''இல்லை டீச்சர். நடிகைன்னா பார்க்க ஆசை இருக்காதா?'' என்றவள், ஒரு கணம் ஏதோ யோசனையில் இருந்து விட்டு, சொன்னாள்.

''அந்த அம்மாவை, நீங்க சொன்னீங்களே அந்த தெய்வநாயகம் வச்சுக்கிட்டு இருக்காருன்னு சொல்றாங்க...''

தூணில் சாய்ந்து அமர்ந்திருந்த கமலா, செண்பகத்தைப் பார்த்துச் சிரித்தாள்.

''ஏய்... நூறு வாட்டி 'இம்போசிஷன்' எழுதினாலும், Cut (கட்), கட்டட், கட்டட் அப்படின்னே எழுதறே.. ஆனா, ஊருலே யார் யாரை வச்சுக்கிட்டு இருக்காங்கன்னு சரியா சொல்றே. யார் யாரை வச்சுக்கிட்டு இருந்தா உனக்கென்ன?''

''இல்லை டீச்சர். நேரடித் தெருவிலே ஒரு பொதுக் கூட்டம் நடந்தப்போ, ஒருத்தர் அப்படிப் பேசினாரு...''

''இவன்களுக்கெல்லாம் வேறே வேலை என்ன? இவனுங்க மனசு பூரா விகாரம்தான் அடைச்சுக்கிட்டிருக்கு! அதனால மத்தவங்க விகாரமே கண்ணுக்குத் தெரியுது. தெய்வநாயகம் இந்தக் கட்சிக்கு எவ்வளவு பாடு பட்டார்னு எனக்குத் தெரியும். இந்த மாவட்டத்துக்கு அவர் எவ்வளவோ செய்திருக்கார். அதெல்லாம் எவன் கண்ணுக்கும் தெரியலே. அந்தப் பெண்ணோட சினேகம் வச்சிருக்கிறதுதான் பெரிசா தெரியுது.''

''தெய்வநாயகம் நல்லவரா, டீச்சர்?''

''யார்தான் முழுக்க முழுக்க நல்லவர். அல்லது முழுக்க முழுக்கக் கெட்டவர். எல்லாம் கலந்துதான் இருக்கும். கொஞ்சம் தண்ணி கொடேன், உன் கையாலே..

செண்பகம் எழுந்து உள்ளே போய்த் தண்ணீர் எடுத்து வந்தாள்.

''டீச்சர்... நீங்க இப்படி சொல்றீங்க.. ஆனா, அவரோடு வாழ மாட்டேன்னு அவர் கட்டின மனைவி தனியா இருக்காங்களாமே...''

கமலாவின் முகத்தில் புன்னகை பரவியது.

''அது புருஷன் பெண்டாட்டி விவகாரம்டி. அவளுக்குப் பிடிக்கலை. தனியா போயிட்டா.''

தண்ணீரைக் குடித்தாள் கமலா.

''டீச்சர்... உங்களுக்கும் இந்த அரசியல்வாதிங்க விஷயமெல்லாம் நல்லாத் தெரியுதே! அழுத்தலா இருந்துக்கிட்டே, எல்லாரையும் தெரிஞ்சு வச்சிருக்கீங்க...''

''சீச்சீ. எனக்கு யாரையும் தெரியாதும்மா! தெய்வநாயகத்தை மட்டும்தான் எனக்குத் தெரியும். ஏன்னா, அவர் என் கணவர்.

திடுக்கிட்டாள் செண்பகம்.

(தொடரும்)

"எண்ணெய் இல்லை,'' என்று பாட்டிலைக் கவிழ்த்தாள், சாவித்திரி.

நான், பர்சைக் கவிழ்த்துக்கொட்டினேன். ஒரு பழைய இரண்டு ரூபாய்த் தாள்.

முழு ரூபாயா, அரை ரூபாயா என்னும் வித்தியாசம் தெரியாத மூன்று நாணயங்கள் உருண்டோடின.

மிஞ்சிப்போனால் நான்கு ரூபாய் தேறும். இதில் இரண்டு ரூபாய் நாளைக்கு பஸ் ஸுக்கு வேண்டும்.

''இரண்டு ரூபாயில் எவ்வளவு எண்ணெய் வாங்க முடியும்.'' உதட்டைப் பிதுக்கினேன், நான்.

''நூறு மில்லி வாங்கலாம்'' என்று யோசனை தெரிவித்தாள், சாவித்திரி.

விரட்டி தட்டிய சுவர் போல் ஆயிற்று என் முகம்.

ஒரு மத்திய அரசு உத்தியோகஸ்தன். இரண்டாயிரம் சம்பளம், ஏ.ஸி. அறைக்குள் உடல் நோகாமல் வேலை.... இத்யாதி.

கேவலம், 'அன்றாடம் காய்ச்சி' மாதிரி நூறு மில்லி எண்ணெய் வாங்கப் போவதாவது.

பார்த்தால், சிரிப்பார்கள்.

''ஏன் சாவித்திரி. இன்னும் இரண்டு நாள் தானே. இருக்கிறதை வழித்து....கிழித்துச் சமாளிக்க முடியாதா.''

''வழிக்கிறது என்ன. பாட்டிலையே துடைச்சுச் சுத்தம் பண்ணிட்டேன். இனி அதை உடைச்சுத்தான் பார்க்கணும்.'' பொன்வறுவலான சாவித்திரியின் பொன்னி மூக்கு, மிளகாய்ப் பழம் போல் சிவக்க ஆரம்பித்தது.

''சரி...சரி பாட்டிலைக் கொடு.''

வாங்கிக் கொண்டு கடைக்குப் போனால், அங்கே அதைவிடக் கொடுமை!

எஸ்.டி.ஓ. ராமநாதன் எதிர்த் திசையில் வந்து கொண்டிருந்தார். கையில் ஒரு சின்ன பிளாஸ்டிக் கூடை இருந்தது. அவரும் அந்தக் கடைக்குத்தான் வருகிறார் என்பது புரிந்ததும் நான் உடனே 'ஜகா' வாங்கினேன்.

நூறு மில்லி எண்ணெய் வாங்குவது மூன்றாம் பேருக்குத் தெரிந்தாலே அகௌரவம். என்னை வேலை வாங்கும் அதிகாரியாய் இருப்பவர் ராமநாதன். அவருக்குத் தெரியலாமோ. வெட்கக் கேடு. புத்திசாலித்தனமாய்ப் பக்கத்தில் இருந்த சந்தில் பதுங்கிக்கொண்டேன்.

ஐந்து நிமிடம் கழித்து மீண்டும் எட்டிப் பார்த்தேன்.

மனிதர், என்னவோ வாங்கிக் கொண்டு தொலைவில் போய்க்கொண்டிருந்தார்.

இனி, தெரிந்த மனிதர் வேறு யாரேனும் வருவதற்குள் எண்ணெய் வாங்கிக் கொண்டு போய்விட வேண்டும்.

மளமளவென்று கடைக்குப் போனேன்.

''நூறு மில்லி கடலை எண்ணெய் கொடுங்கள்'' என்று பாட்டிலை நீட்டினேன்.

கடைக்காரரிடமும், எண்ணெய் ஊற்றிய பையனிடமும் வித்தியாசமான மாற்றம் எதும் தெரியவில்லை. என் நல்ல வேளை.

எண்ணெய் வாங்கிக் கொண்டு திரும்பிய போது —

''இந்தச் சாவிக் கொத்து யாருடையது, சார்'' என்றார், கடைக்காரர்.

வாங்கிப்பார்த்தேன். வெங்கடாஜலபதி திருவுருவத்துடன் கூடிய நாலு பீரோ சாவிகள். ராமநாதன் சாருடைய சாவிக் கொத்து அது! சந்தேகத்துக்கு இடமே இல்லை. கடைக்கு வந்தவர் ஞாபக மறதியாய் விட்டு விட்டுப் போய் விட்டார்.

''இது எங்கள் ஆபீசருடைய சாவிக் கொத்து. கொடுங்கள். அவரிடம் கொண்டு போய்க் கொடுத்து விடுகிறேன்.''



வாங்கிக் கொண்டு புறப்பட்டேன்.,

ராமநாதன் வீடு.

வாயில் படியில் ஏறியதும் உள்ளே என்னவோ, சலசலப்பு.

மனைவியிடம் கடிந்து கொண்டிருந்தார், ராமநாதன்.

''நான் அப்போதே சொன்னேன். கேட்டாயா'' என்றார், அவர்.

''என்ன?'' என்று நிதானமாய்க் கேட்டாள், அவரது மனைவி..

''இனிமேற்கொண்டு இப்படி ஐம்பது மில்லி எண்ணெய் வாங்குவதானால் யாராவது பசங்களை விட்டுத்தான் வா ங் க ச் சொல்லவேண்டும். சேச்சே.....''

''ஏன்...என்ன நடந்தது?''

''பசங்கள் எல்லாரும் விளையாடப் போய்விட்டார்கள் என்று நீ சொன்னதைக் கேட்டு நானும் காத்திருக்கப் பொறுமை இல்லாமல் கடைக்குப் போனேன், பார்.... என் புத்திவை.....''

''விஷயத்தைச் சொல்லுங்களேன்.''

''என்னத்தச் சொல்றது? எங்கள் ஆபீஸ் பர்சேஸிங் ஒளார்க் பத்மநாபன் அங்கே கடைக்கு வந்துவிட்டான். என்னிடம் வேலை பார்க்கும் ஒரு சபார்டினேட்டுக்கு முன்னே, 'மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் அதிகாரி ஐம்பது மில்லி எண்ணெய் வாங்கினால் கேவலமாய் இருக்காதா...''

''ம்....''

''அவனைப் போக்குக் காட்டி விட்டு எண்ணெய்வாங்கிவருவதற்குள் என்தேகமே கூனிக் குறுகிவிட்டது, போ!''

வெளியில் நின்ற எனக்குச் சிரிப்பு வந்தது. 'எத்தனை ஆயிரம் சம்பளம் வாங்கினாலும், மாதக் கடைசி, மாதக்கடைசிதான். யாரையும் விட்டு வைக்காது.'

இனி வெட்கப்படத் தேவையில்லை.

''சார்....'' என்றேன், கனத்த குரலில் – கம்பீரமாக!



மடமையைக்

கொளுத்துவோம்!



# இரட்டைப் பாரம் சுமப்பவர்கள்!

**ஒரு பெண் வேலைக்குப் போகும் போது தொழிலாளி — தாய் என்ற இரட்டைப் பொறுப்புக்களையும் கஷ்டப்பட்டுச் சுமக்கிறாள். எனவே அவள் நலன் கருதிச் சில சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. ஆனால் இச்சட்டங்கள் அவளுக்குப் போதிய பாதுகாப்பை அளிக்கின்றனவா?**

"ஒரு பெண் தொழிலாளி பேறுகால விடுப்பில் செல்லும் போது அவளுக்குத் தொடர்ந்து ஊதியம் கிடைக்க வழி செய்தால் மட்டுமே போதாது. முழுமையான பேறுகால நலன்கள் என்பவை, அப்பெண் பிரசவத்தின் போது இழக்கும் சக்தியைத் திரும்பப் பெறவும், தன் குழந்தையைப் பாலூட்டி வளர்க்கவும், மீண்டும் அவள் வேலைக்குத் திரும்பும் போது பிரசவத்துக்கு முந்தைய அளவிலும் தரத்திலும் அவள் தெம்புடன் பணியாற்றவும் உதவுவனவாக இருக்க வேண்டும்" என்று உச்ச நீதி மன்றமே தெளிவாகக் கூறியிருக்கிறது.

ஆனால் பேறுகால நல உரிமைகளை வழங்கும் பேறுகால நலச் சட்டம் (1961) மற்றும் ஈ.எஸ்.ஐ. சட்டம் (1948) ஆகியவை இருபதுக்கும் மேற்பட்ட ஊழியர்கள் பணியாற்றும் நிறுவனங்களை மட்டுமே கட்டுப்படுத்துகின்றன. இதனால் அமைப்புசாராத் துறையைச் சேர்ந்த தொண்ணூறு சதவிகிதம் பெண் தொழிலாளர்கள் இச் சட்டங்களின் பயன்களை அனுபவிக்க முடியாது.

அது போக, தொழிற் சாலைகளில் பணி புரியும் பாக்கி பத்து சதம் பெண்களிலும் அனைவருக்கும் மேற் சொன்ன சட்டங்களின் பயன்கள் கிடைக்கவில்லை. 1983 ஆம் ஆண்டில் தொழிற் சாலைகளில் பணி புரிந்த மூன்று லட்சம் மகளிருள் 1813 பேருக்கு மட்டுமே பேறுகால நலச் சட்டப்படி உதவிகள் வழங்கப்பட்டன! ஆனால் தாய்மை அடைந்தவர்கள் இதை விடப் பல மடங்கு அதிகம். பாக்கி பேருக்கு உதவி கிட்டாதது ஏன்?

பேறுகால நலச் சட்டப்படி, ஒரு பெண் தொழிலாளி தனது பிரசவத்துக்குக் குறிக்கப்பட்ட நாளுக்கு முந்தைய ஒரு வருட காலத்தில், குறைந்தபட்சம் 160 நாட்களாவது தொழிற்சாலையில் வேலை செய்திருக்க வேண்டும். சட்டத்தின் இந்தப் பிரிவைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு, திருமணமானவுடனேயோ, கருவுற்றதற்கான அடையாளங்கள் தெரிய ஆரம்பித்தாலோ பெண் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்து விடுகிறார்கள் முதலாளிகள். சில இடங்களில் தேதி குறிப்பிடாத ராஜிநாமா கடிதங்களையோ, கருத்தடை அறுவைச் சிகிச்சை செய்து கொண்டதற்கான சான்றிதழையோ பெற்றுக் கொண்டுதான் பெண்களைப் பணிக்கு அமர்த்துகிறார்கள். சட்டத்தில் விதித்துள்ள குறைந்தபட்சக் கால அளவான 160 நாட்கள் அவர்கள் தொழிற்சாலையில் பணியாற்றுவதைத் தடுக்க, அவர்களைத் தற்காலிகமாகப் பணி நீக்கம் செய்கிறார்கள்; அல்லது தற்காலிக ஊழியராகவோ, ஒப்பந்த (Contract) ஊழியராகவோ பணியில் அமர்த்துகிறார்கள். உழைக்கும் மகளிருள் சுமார் ஐம்பது சதவிகிதத்தினர் திருமணமாகாதவர்களாகவோ, கணவனை இழந்தவர்களாகவோ, கணவனால் கைவிடப்பட்டவர்களாகவோ, விவாகரத்து பெற்றவர்களாகவோ, நாற்பத்தைந்து வயதைக் கடந்தவர்களாகவோ உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. சட்டமும், அரசியல் சாசனமும் பெண்ணுக்கு உறுதி செய்கிற பேறுகால நலங்களைச் சமூகம் வழங்கத் தயாராயில்லை என்பதையே இது காட்டுகிறது.



அதிகபட்சமாக அனுமதிக்கப்படும் பேறுகால விடுப்பு பிரசவத்துக்கு முன் ஆறு, பிரசவத்துக்குப் பின் ஆறு எனப் பன்னிரண்டு வாரங்கள்தான். பெண் தொழிலாளரின் உடல்நிலை அவரது இரட்டைப் பொறுப்பால் பாதிக்கப்படும் என்பதால் இந்த விடுப்புக் காலம் மொத்தத்தில் நான்கு மாதங்களாக உயர்த்தப்பட வேண்டும்.

விடுப்புக் காலத்தில், நாளொன்றுக்கு ஒரு ரூபாய் அல்லது ஒரு நாள் ஊதியம் (இவற்றுள் எது அதிகமோ அத் தொகை) பெண் ஊழியருக்குப் பேறுகால நலத் தொகையாக வழங்க வேண்டும் என்பது சட்டம். இதை நாம் குறை கூறுவதற்கில்லை. ஆனால் சட்டப்படி கொடுக்கப்பட வேண்டிய மருத்துவ உதவித் தொகை இருபத்தைந்து ரூபாய்தான்! இது பெண் இனத்தையே கேலி செய்வது போலிருக்கிறது. இப்படி பிச்சைக் காக தருவதை விட மருத்துவ உதவி என்று ஏதும் தராமலே இருக்கலாம்.

மகப்பேறு விடுப்பு முடிந்து வேலைக்குத் திரும்பும் ஊழியர் ஒரு மாத காலத்துக்குக் கடுமையான உழைப்பிலிருந்து விலக்கு பெறவும், குழந்தைக்குப் பதினைந்து மாதங்கள் ஆகும் வரை தாய்ப்பால் கொடுப்பதற்காக அவள் கூடுதலாக இரண்டு முறை பணியிலிருந்து இடைவேளை எடுத்துக் கொள்ளவும் சட்டம் வகை செய்கிறது.

ஆனால் பொதுத் துறையிலும் சரி, தனியார் துறையிலும் சரி பேறுகால நலச் சட்டம் பரவலாக மீறப்பட்டு வருகிறது என்பதையே பல ஆய்வுகள் உணர்த்துகின்றன. இத்தகைய சட்ட மீறல்களை எதிர்த்து 1979 இல் நாற்பது புகார்கள் பதிவாகிய போது ஐந்து புகார்கள் மீதுதான் நடவடிக்கை முயற்சிகளே எடுக்கப்பட்டன. 1978 இல் இருபத்தோரு புகார்கள் பதிவாகி, ஒரே ஒரு புகார் மீது நடவடிக்கை முயற்சி எடுக்கப்பட்டது.

பேறுகால நலத் திருத்த மசோதா ஒன்று 1987 முதல் பாராளுமன்றத்தில் சட்டமாவதற்காகக் காத்திருக்கிறது. இத் திருத்தம் கொண்டு வரப்பட்டால், கூடுதலான பேறுகால விடுப்பும் நலத் தொகையும் பெண் ஊழியர்களுக்குக் கிடைக்க வழியுண்டு. சட்ட மீறல்களைக் குறித்துப் புகார்களை அரசாங்கத்திடம் மட்டுமின்றித் தொழிற் சங்கத் தலைவர்களிடமும் சேவை அமைப்புக்களிடமும் பதிவு செய்யவும் இச் சட்டம் வழி செய்யும்.

ஆனால் எந்தச் சட்டத் திருத்தமும், வரையறுக்கப்பட்டத் தொழிலாளி — முதலாளி உறவு என்பதே இல்லாத அமைப்புச் சாராத் துறையில் உள்ள பெண்களுக்கு உதவ முடியாது. தவிர, அமைப்புச் சார்ந்த துறையிலும் கூட, இச்சட்டங்கள் காரணமாகவே பெண்களை வேலைக்கு வைத்துக் கொள்ளப் பல நிறுவனங்கள் தயங்குகின்றன.

வேலைக்குப் போகும் தாய்மார்களையுடைய முப்பத்தி மூன்று மில்லியன் குழந்தைகளுள் இரண்டு லட்சம் குழந்தைகள் மட்டுமே இன்று காப்பக வசதியை அனுபவிக்கின்றனர். அமைப்பு சாரா துறையிலோ காப்பக வசதி அடியோடு கிடையாது. அமைப்புச் சார்ந்த துறையில் உள்ள காப்பகங்களோ சுகாதாரக் குறைவாக, தேர்ச்சி பெற்ற பணியாளர்கள் இன்றி சராசரிக்கும் கீழான தரத்தினவாக உள்ளன.

எட்டாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது 'குழந்தைப் பராமரிப்பு' முன்னுரிமை பெற்ற துறையாகக் கருதப்பட்டு, சிறந்த குழந்தைக் காப்பகங்கள் உருவாக வழி பிறக்க வேண்டும்.

பேறுகால நலங்களும் குழந்தைப் பராமரிப்பும் இணை பிரிக்க முடியாதவை என்பதால் இவை இரண்டையுமே உள்ளடக்கிய ஒரே சட்டத்தைக் கொண்டு வர இயலுமா என்று அரசாங்கம் ஆராய வேண்டும்.

பேறுகால நலன்கள் பெறுவது ஒரு பெண்ணுக்கு அளிக்கப்படும் சலுகை என்ற நிலை மாறி அவளுடைய உரிமை என்ற கருத்தில் சட்டங்கள் இயற்றப்படுவதுடன் அத்தகைய மனப்பான்மையும் சமுதாயத்தில் அனைவரிடமும் உருவாகும் போதுதான் பெண் இனத்துக்குச் சம நீதி கிடைத்ததாகும்.

— ருக்ஷானா சௌத்ரி

நன்றி: Women's Equality.

படம்: அழ. காசி விஸ்வநாதன்.

ஆரோஃபுட் அளிக்கிறது-
சுத்தமான,தரமான கோதுமை மாவு.
வசதியான பேக்கிலே!




கோதுமையைத் தேடி வாங்கி, சுத்தம் செய்து அரைக்கும் தொல்லை இனி இல்லை. இப்போது வந்து விட்டது ஆரோஃபுட் கோதுமை மாவு. உயர்ந்த தரமானது; மிகவும் சுத்தமானது — ஆரோஃபுட் நிறுவனத்தின் மற்ற தயாரிப்புகளான ட்ரு பிஸ்கட், சேமியா போன்றே!

உங்கள் குடும்பத்தினருக்கு ஆரோஃபுட் கோதுமை மாவால் பூரி, சப்பாத்தி செய்து கொடுங்கள். அதன் அருமையான ருசி அவர்களைக் கவர்ந்துவிடும்.

- தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாப் கோதுமையில் தயாரிக்கப்படுவது.
- மெஷின்களால் சுத்தம் செய்யப்பட்டு அரைக்கப்படுவது.
- வைட்டமின்களும் சத்துகளும் பாதுகாப்பாக உள்ள வகையில் பேக் செய்யப்படுவது.

## ஆரோஃபுட் கோதுமை மாவு

தரத்தையும் வசதியையும் நாடும் இல்லத்தரசிகளுக்காக!

ஒரு ட்ரு தயாரிப்பு. சிறந்த பொருட்களைக் கொண்டு, அன்புடனும் அக்கறையுடனும் தயாரிக்கப்படுவது.

HTA 7222 TM

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## அத்தியாயம் 26
## வீதியில் குழப்பம்



ந்தவை கண்ணீர் விடுவதைப் பார்த்து விட்டு வானதியும் விம்மத் தொடங்கினாள். உலகத்தில் எத்தனையோ இன்ப துன்பங்களைப் பார்த்தவரான அநிருத்தப் பிரம்மராயரின் இரும்பு நெஞ்சமும் இளகியது.

''தாயே! சக்கரவர்த்தி இப்போது படும் கஷ்டங்களுக்கெல்லாம் காரணமானவன் இந்தப் பாவிதான். என்ன பிராயச் சித்தம் செய்து அந்தப் பாவத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேனோ, தெரியவில்லை!'' என்றார்.

''ஐயா! தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆயினும் எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். அந்தக் கரையர் மகள் இறந்து விடவில்லை, உயிரோடிருக்கிறாள் என்பதைத் தந்தைக்குத் தெரிவித்து விட்டால், அவருடைய துன்பம் தீர்ந்து மன அமைதி ஏற்பட்டு விடும். அதைச் சொல்லுவதற்காகவே தங்களிடம் வந்தேன். எப்படியாவது என் பெரியன்னையை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள் என்று கேட்டுக் கொள்ள வந்தேன். ஆனால் தாங்களே அதற்குப் பிரயத்தனம் செய்திருக்கிறீர்கள்!'' என்றாள் இளைய பிராட்டி.

''ஆம், அம்மா! நானும் அத்தகைய முடிவுக்குத்தான் வந்திருந்தேன். மந்தாகினிதேவி உயிரோடிருக்கும் விவரத்தைச் சக்கரவர்த்தியிடம் தெரிவித்து விடத்தீர்மானித்துவிட்டேன். ஆனால் வெறுமனே சொன்னால் அவர் நம்பமாட்டார். முன்னே நான் கூறியது பொய், இப்போது சொல்லுவதுதான் உண்மை என்று எவ்விதம் அவரை நம்பச் செய்வது? அதற்காகவே அந்தத் தேவியை இங்கே அழைத்து வரச் செய்த பிறகு சொல்ல எண்ணினேன். நேரிலே பார்த்தால் நம்பியே தீர வேண்டும் அல்லவா? அதற்காகவே முக்கியமாக இலங்கைத் தீவுக்குச் சென்றிருந்தேன். ஆனால் தங்கள் தம்பியோடும் பெரிய வேளாரோடும் சதி செய்வதற்காக நான் ஈழ நாட்டுக்குப் போனேன் என்று பழுவேட்டரையர்கள் சக்கரவர்த்தியிடம் சொல்லியிருக்கிறார்கள். அது இல்லை என்று நிரூபிப்பதற்காகவேனும் மந்தாகினி தேவியைத் தங்கள் தந்தையின் முன்

னால் கொண்டு போய் நிறுத்தப் போகிறேன்'' என்றார் அநிருத்தர்.

''ஐயா! அந்த மாதிரி திடீரென்று கொண்டு போய் நிறுத்தினால் தந்தைக்கு ஏதேனும் தீங்கு நேரிட்டாலும் நேரிடலாம். முன்னால் தெரிவித்து விட்டுத்தான் அவர்களைப் பார்க்கச் செய்ய வேணும்!'' என்றாள் இளைய பிராட்டி.

''ஆம், ஆம்; அவ்வாறுதான் செய்ய உத்தேசித்திருக்கிறேன். இந்த வீட்டுக்கு மந்தாகினி தேவி வந்து சேர்ந்ததும் போய்ச் சொல்லலாம் என்று நினைத்தேன். இன்று காலை அரண்மனைக்கு வரவே எண்ணியிருந்தேன். அதற்குள் தியாகவிடங்கரின் மகள் நடுவில் தலையிட்டு எனக்கு ஏமாற்றத்தை அளித்து விட்டாள். அந்தப் பொல்லாத பெண்ணுக்கு ஒரு நாள் தகுந்த தண்டனை விதிப்பேன்!'' என்றார் முதன் மந்திரி.

''ஐயோ! அப்படி ஒன்றும் செய்யாதீர்கள். அவள் நல்ல பெண்ணோ, பொல்லாத பெண்ணோ, நான் அறியேன். ஆனால் அருள்மொழியைக் கடலில் முழுகிப் போகாமல் காப்பாற்றியவள் பூங்குழலிதான் அல்லவா?''

''கடவுள் காப்பாற்றினார் என்று சொல்லுங்கள், தாயே! பாற்கடலில் பள்ளிகொண்ட பகவான் காப்பாற்றினார். அவருடைய அருள் இல்லாவிட்டால், இந்தச் சிறு பெண்ணால் என்ன செய்துவிட முடியும்? ஜோதிட சாஸ்திரம் உண்மையானால், கிரகங்கள் — நட்சத்திரங்களின் சஞ்சார பலன்கள் மெய்யானால், இளவரசனைக் கடலும் தீயும் புயலும் பூகம்பமும் கூட ஒன்றும் செய்ய முடியாது.....''

''இறைவன் அருளின்றி எதுவும் நடவாதுதான். ஆனால் இறைவனுடைய சக்தியும் மனிதர்கள் மூலமாகத்தானே இயங்க வேண்டும்? பூங்குழலியை மறுபடியும் நாகைப்பட்டினத்துக்கு அனுப்ப எண்ணியிருக்கிறேன், ஐயா! அல்லது, தாங்கள் வேறு விதமாக எண்ணினால், — பகிரங்கமாகவே அருள்மொழியை இங்கு வரச் செய்யலாம் என்று கருதினால்....''

''இல்லை, தாயே! இல்லை! சிம்மாதனம் யாருக்கு என்பது நிச்சயமாகும் வரைக்கும் அருள்மொழி வர்மனைப் பற்றி மக்கள் அறிந்து கொள்ளாமலிருப்பதே நல்லது. தங்கள் தந்தையை இன்று முடிவாகக் கேட்டுவிட எண்ணியிருக்கிறேன். மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதாயிருந்தால், தங்கள் தம்பியை மறுபடியும் ஈழ நாட்டுக்குத் திருப்பி அனுப்பி விடுவது நல்லது. அருள்மொழி வர்மர் இங்கு இருக்கும்போது மதுராந்தகருக்கு மகுடம் சூட்டச் சோழ நாட்டு மக்கள் ஒருநாளும் உடன்பட மாட்டார்கள். சோழ நாடு பெரும் ரண களமாகும்; சோழ நாட்டின் நதிகளில் எல்லாம் இரத்த வெள்ளம் பெருகி ஓடும்....''

''ஐயா! அப்படியானால் பூங்குழலியையும் சேந்தன் அமுதனையும் மறுபடி நாகைப்பட்டினத்துக்கு அனுப்புவதே நல்லதல்லவா?''

''அதுதான் நல்லது. சக்கரவர்த்தி விரும்பினால் ஒருமுறை அருள்மொழி வர்மர் இரகசியமாகத் தஞ்சைக்கு வந்து விட்டுத் திரும்பிப் போகலாம்!''

''ஆம்; ஆம்! மந்தாகினி தேவியும் அருள்மொழியும் உயிரோடிருக்கிறார்கள் என்பதை ஒருமுறை கண்ணால் பார்த்துத் தெரிந்து கொண்டால்தான் சக்கரவர்த்தியின் உள்ளம் அமைதி அடையும்.''

''பெரிய இளவரசரைப் பற்றித் தங்கள் தந்தைக்கு எவ்விதக் கவலையும் இல்லை அல்லவா?''

''இல்லவே இல்லை. ஆதித்த கரிகாலனுக்கு அபாயம் விளைவிக்கக் கூடியவர்கள் இந்த உலகத்திலேயே இல்லை என்று சக்கரவர்த்தி நம்பியிருக்கிறார். தாங்கள் என்ன நினைக்கிறீர்கள், ஐயா!''

''எனக்கு என்னமோ அவ்வளவு நம்பிக்கை இல்லை. போர்க்களத்தில் பெரிய இளவரசர் அஸகாய சூரர்தான். ஆனால் மற்ற இடங்களில் அவரை ஏமாற்றுவதும் வஞ்சிப்பதும் கஷ்டமல்ல. பழுவேட்டரையர்கள் அவரை விரோதிக்கிறார்கள். பழுவூர் இளைய ராணி அவருக்கு எதிராக ஏதோ பயங்கரமான இரகசியச் சூழ்ச்சி செய்து வருகிறாள். இந்த இரண்டு செய்திகளையும் கரிகால

ருக்கு என் சீடன் மூலம் சொல்லி அனுப்பினேன். ஆயினும் பலன் இல்லை. தஞ்சாவூருக்கு எவ்வளவு சொல்லியும் வரமறுத்தவர் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குப் போயிருக்கிறார்.....''

''ஐயா! பழுவூர் இளைய ராணி எங்கள் சகோதரியாயிருக்கக் கூடும் என்றுநான் என் தமையனுக்குச் செய்தி அனுப்பியிருக்கிறேன். அருகிலிருந்து காப்பாற்றும் படியும் வாணர் குலத்து வீரருக்குச் சொல்லி அனுப்பினேன். ஆகா! வல்லவரையர் மட்டும் இப்போது இங்கே இருந்திருந்தால், நாகைப்பட்டினத்துக்கு அனுப்பியிருக்கலாம்.....''

''அந்தப் பிள்ளை ஏதாவது சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்ளாமலிருப்பதற்கு நானும் என் சீடனை அனுப்பியிருப்பேன். இப்போது கூடத் தாங்கள் பூங்குழலியை அனுப்பினால், பின்னோடு திருமலையையும் அனுப்ப உத்தேசிக்கிறேன்.''

''போனவர்கள் இன்னும் வந்து சேர வில்லையே? என் பெரியன்னை வந்து விட்டால் என் நெஞ்சிலிருந்து முக்கால் வாசிபாரம் இறங்கிவிடும். ஐயா! அவர் வந்தவுடனே, தாங்கள் என் தந்தையைச் சந்தித்துச் சொல்லி விடுவீர்கள் அல்லவா? நான் என் அன்னையிடம் அடியிலிருந்து எல்லாக் கதையும் சொல்லியாக வேண்டும்......''

''ஆகா! மலையமான் மகளுக்குத் தான் எத்தனை மனத் துன்பங்கள்! அதோடு, திருக்கோவலூர்க் கிழவனுக்கு இதெல்லாம் தெரியும்போது அவன்என்னசெய்யப்போகிறானோ? தன் பேரப் பிள்ளைக்குப் பட்டம் இல்லை என்று தெரிந்தால், இந்த நாட்டையே அழித்து விடுவேன் என்று ஒருவேளை மலையமான் கிளம்பக் கூடும்.....''

''என் பாட்டனாரைச் சரிக்கட்டும் வேலையை என்னிடம் விட்டு விடுங்கள். இந்தப் பெண் வானதி இருக்கிறாளே. இவளுடைய பெரிய தகப்பனாரைப் பற்றித்தான் எனக்குக் கவலையாயிருக்கிறது. கொடும்பாளூர்ப் பெண் சோழ சிங்காதனத்தில் ஒருநாள் வீற்றிருக்கப் போகிறாள் என்று அவர் ஆசை கொண்டிருக்கிறாராம். இந்தப் பெண்ணின் மனத்திலே கூட அந்த ஆசை இருக்கிறது.....''

வானதி இப்போது குறுக்கிட்டு, ஆத்திரம் நிறைந்த குரலில், ''அக்கா!......'' என்றாள்.



ந்தச் சமயத்தில், வானதி மேலே பேசுவதற்குள், பூங்குழலி உள்ளே பிரவேசித்தாள். அவள் தனியாக வந்தது கண்டு மூன்று பேரும் சிறிது துணுக்குற்றார்கள்.

''கரையர் மகளே! உன் அத்தை எங்கே? திருமலை எங்கே?'' என்று முதன் மந்திரி பரபரப்புடன் கேட்டார்.

''ஐயா! என் கர்வம் பங்கமுற்றது. நான் சொல்லிப் போனபடி அத்தையை இங்கு கொண்டு வந்து சேர்க்க முடியவில்லை.''

''நீங்கள் போவதற்குள்ளேயே காணோமா? அல்லது வருவதற்கு மறுத்து விட்டாளா? அப்படியானால்...''

''இல்லை, ஐயா! கோட்டைக்குள்ளே அழைத்துக் கொண்டு வந்து விட்டோம். அதற்குப் பிறகுதான் ஜனக் கூட்டத்திலே அகப்பட்டு அத்தை காணாமற் போய்விட்டார்!'' என்றாள் பூங்குழலி. பின்னர், அச்சம்பவம் பற்றிய பின்வரும் விவரங்களைக் கூறினாள்: —

மந்தாகினி தேவி நல்ல வேளையாகச் சேந்தன் அமுதன் வீட்டிலேயே தான் இருந்தாள். அவள் அங்கேயே இருக்கும்படியான காரணங்கள் நேர்ந்திருந்தன. நேற்றிரவு அடித்த புயலில் அமுதனுடைய வீடு சின்னாபின்னமடைந்திருந்தது. தோட்டத்திலிருந்த மரம் ஒன்று வீட்டுக் கூரை மேலேயே விழுந்திருந்தது. சேந்தன் அமுதனோ முதல் நாளிரவு மழையில் நனைந்த காரணத்தினால் கடும் சுரம் வந்து படுத்துப் பிதற்றிக் கொண்டிருந்தான். இரண்டு சகோதரிகளும் விழுந்த மரங்களை அகற்றி



வீட்டைச் சரிப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். பூங்குழலியைக் கண்டதும்மந்தாகினி மகிழ்ச்சி அடைந்தாள். திருமலையைக் கண்டு கொஞ்சம் தயங்கினாள். அவன் நம்மைச் சேர்ந்தவன் என்று பூங்குழலி கூறிய பிறகு தைரியம் அடைந்தாள். வழியில் பூங்குழலியும் திருமலையும் ஊமை ராணியிடம் என்ன சொல்லுவது, எவ்வாறு சொன்னால் அவள் தயங்காமல் தங்களுடன் வருவாள் என்று பேசி முடிவு செய்திருந்தார்கள். அந்தப்படியே பூங்குழலி அவள் அத்தையிடம் கூறினாள். சக்கரவர்த்தி நோய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருப்பதாகவும், எந்த நேரத்திலும் இந்த மண்ணுலகை விட்டுப் போய்விடலாமென்றும், அவருடைய மூச்சுப் பிரிவதற்கு முன்னால் ஊமை ராணியை ஒருதடவைபார்க்க ஆசைப்படுகிறார் என்றும், ஊமை ராணியை அவர் இத்தனை காலமாகியும் மறக்கவில்லையென்றும், அவளைப் பார்த்தால் ஒரு வேளை அவர் புதிய பலம் பெற்று இன்னும் சில காலம் உயிர் வாழக்கூடும்என்றும்சமிக்ஞைபாஷையில் தெரியப்படுத்தினாள். அதற்காகவேதான் முதன்மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அவளை எப்படியாவது பிடித்து வர ஆட்களை அனுப்பியதாகவும், முதன் மந்திரியின் அரண்மனையிலேதான் முதல் நாளிரவு தான் தங்கியிருந்ததாகவும் கூறினாள். சக்கரவர்த்தியின் அருமைப் புதல்வி குந்தவைதேவி ஊமை ராணியைத் தன் தந்தையிடம் அழைத்துப் போவதற்காக முதன் மந்திரி வீட்டில் காத்திருப்பதாகவும்தெரியப்படுத்தினாள். இதையெல்லாம் ஒருவாறு தெரிந்து கொண்ட பிறகு மந்தாகினி பூங்குழலியுடனும் திருமலையுடனும் புறப்பட்டு வர இசைந்தாள். கோட்டை வாசலுக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது, சக்கரவர்த்தியின் வேளக்காரப் படையினர் கோட்டைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் போகட்டும் என்று மூன்று பேரும் ஒதுங்கி நின்றார்கள். வேளக்காரப் படையை மந்தாகினி கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். வேளக்காரப் படையைத் தொடர்ந்து ஒரு பெருங்கூட்டம்கோட்டைக்குள்ளே பிரவேசித்தது. அவர்களைத் தடுத்து நிறுத்தவும் கோட்டைக் கதவுகளைச் சாத்தவும் காவலர்கள் செய்த முயற்சி பலிக்கவில்லை.

''இந்தக் கூட்டத்தோடு நாம் போக வேண்டாம்; முதன் மந்திரி அரண்மனைக்குப் போகப் பிரத்தியேகமான சுரங்க வழி இருக்கிறது. அதன் வழியாகப் போகலாம்'' என்றான் திருமலை. இதைப் பற்றிப் பூங்குழலி அவளுடைய அத்தைக்குச் சொல்லப் பிரயத்தனப்பட்டாள். ஊமை ராணி அதைக் கவனியாமல் கோட்டைக்குள் போகும் கூட்டத்தோடு சேர்ந்து போகத் தொடங்கினாள். திருமலையும் பூங்குழலியும் பின்னோடு சென்றார்கள். கோட்டைக்குள் பிரவேசித்த பிறகும், திருமலை வேறு தனி வழியாகப் போகலாம் என்று சொன்னதைப் பூங்குழலியின் அத்தை பொருட்படுத்த வில்லை. கூட்டத்துடன் கலந்தே சென்றாள். கூட்டத்தைப் பார்த்துப் பயப்படும் சுபாவம் உடையவள் இம்மாதிரி செய்வதைக் கண்டு மற்ற இருவருக்கும் வியப்பாயிருந்தது. கொஞ்ச தூரம் போன பிறகு கூட்டத்தில்சிலர் மந்தாகினியைக் குறிப்பாகக்

கவனிக்க ஆரம்பித்தார்கள். "இந்த அம்மாளைப் பார்த்தால் பழுவூர் இளைய ராணியின் ஜாடையாக இல்லையா?" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். திருமலைக்கும் பூங்குழலிக்கும் இது கவலையை அளித்தது. அவர்கள் மந்தாகினிக்கு முன்னால் போய் நின்று தடுத்து நிறுத்த முயன்றார்கள். இதற்குள் ஆழ்வார்க்கடியானைப் பார்த்தவர்கள் சிலர் "இவன் யாரடா வைஷ்ணவன்? பெண் பிள்ளையைத் தொந்தரவு படுத்துகிறான்?" என்றார்கள். இந்த வார்த்தைகள் காதில் விழுந்து வேளக்காரப்படையில் பின்னால் போனவர்கள் திரும்பி வந்தார்கள். ஊமை ராணியைச் சூழ்ந்து கொண்டு மற்றவர்களை அப்புறப்படுத்தினார்கள். அந்த நெருக்கடியில் திருமலையும் பூங்குழலியும்கூட அப்பால் தள்ளப்பட்டு விலகிப் போக நேர்ந்தது. வேளக்காரப் படையில் ஒருவன் மந்தாகினி தேவியிடம் "அம்மா! நீ யார்? உன்னை யார் தொந்தரவு செய்தார்கள், சொல்! அவனை இங்கேயே தூக்கிலே போட்டு விடுகிறோம்!" என்று கேட்டான். ஊமை ராணி மறுமொழி சொல்லாமல் நின்றாள். இன்னும் சிலர் கேட்டதற்கும் அவள் பதில் சொல்லவில்லை. இதற்குள் ஒருவன் "இவளைப் பார்த்தால் பழுவூர் ராணி ஜாடையாக இல்லையா?" என்றான். இன்னொருவன், "அப்படித்தான் இருக்க வேண்டும். அதனாலேதான் இவ்வளவு கர்வமாயிருக்கிறாள்!" என்றான். "பழுவூர்க் கூட்டமே கர்வம் பிடித்தகூட்டம்!" என்றான் மற்றொருவன். இந்த நிகழ்ச்சிகள் சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனைக்குச் சமீபத்தில் நிகழ்ந்தன. ஆகையால் என்ன சச்சரவு என்று தெரிந்து கொள்வதற்காகப் பழுவூர் வீரர்கள் சிலர் அங்கே வந்தார்கள். "பழுவூர்க் கூட்டமே கர்வம் பிடித்த கூட்டம்" என்று வேளக்கார வீரன் ஒருவன் கூறியது அவர்கள் காதில் விழுந்தது. "யாரடா பழுவூர்க் கூட்டத்தைப்பற்றி நிந்தனை செய்கிறவன்? இங்கே முன்னால் வரட்டும்" என்றான் பழுவூர் வீரன் ஒருவன். "நான்தானடா சொன்னேன்! என்னடா செய்வாய்?" என்று வேளக்கார வீரன் முன் வந்தான். "நீங்கள் தானடா கர்வம் பிடித்தவர்கள். உங்கள் கர்வம் பங்கமடையும் காலம் நெருங்கி விட்டது!" என்றான் பழுவூர் வீரன். "ஆகா! எங்கள் இளவரசரைக்கடலில் மூழ்கடித்து விட்டதனால் இப்படிப் பேசுகிறாயா? உங்களைப் போன்ற பாதகர்கள் இருப்பதாலேதான் புயல் அடித்து ஊரெல்லாம் பாழாகிவிட்டது!" என்றான் கூட்டத்தில் ஒருவன். பழுவூர் வீரன், "என்னடா சொன்னாய்?" என்று அவனைத் தாக்கப் போனான். வேளக்கார வீரன் அவனைத் தடுத்தான். பின்னர் கூட்டத்தில் கைகலப்பும் குழப்பமும் கூச்சலும் எழுந்தன. "பழுவூர் வள்ளல்கள் வாழ்க!" என்று சிலரும், "மூன்று உலகம் உடைய சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க!" என்று சிலரும் கோஷமிட்டார்கள். "கொடும்பாளூர் வேளார் வாழ்க!" "திருக்கோவலூர் மலையமான் வாழ்க!" என்ற குரல்களும் எழுந்தன. அச்சமயத்தில்



சின்னப் பழுவேட்டரையரே குதிரை மீது ஆரோகணித்து அங்குவந்துசேர்ந்தார். அவரைக் கண்டதும் சண்டை நின்றது. ஜனங்களும் கலைந்து நாலா புறமும் சிதறி ஓடினார்கள். வேளக்காரப் படையினர் முன்னால் சென்றார்கள். பழுவூர் வீரர்கள் காலாந்தக கண்டரைச் சூழ்ந்து கொண்டு நடந்ததைத் தெரிவித்தார்கள். பூங்குழலியும் ஆழ்வார்க்கடியானும் வீதி ஓரத்தில் ஒதுங்கினார்கள். சுற்று முற்றும் கூர்ந்து கவனித்தார்கள். மந்தாகினியைக் காணவில்லை.

''ஐயோ! இது என்ன? இப்படி நேர்ந்து விட்டதே! தலைநகரில் அரசாட்சி அழகாக நடக்கிறது! அத்தையை எப்படிக் கண்டுபிடிப்பது? ஏதாவது கெடுதல் நேர்ந்திருக்குமோ? யாரேனும் பிடித்துக் கொண்டு போயிருப்பார்களோ?'' என்று பூங்குழலி கவலைப்பட்டாள். காலாந்தக கண்டரும் பழுவூர் வீரர்களும் போன பிறகு நாலாபுறமும் தேடிப் பார்த்தார்கள். மந்தாகினியைக் காணவில்லை. திருமலை ''நான் இன்னும் சிறிது நேரம் தேடிப் பார்க்கிறேன். நீ சீக்கிரம் சென்று முதன் மந்திரியிடமும் இளையபிராட்டியிடமும் சொல்லு! நாம் இரண்டு பேர் மட்டும் தேடினால் போதாது. முதன் மந்திரியும் இளைய பிராட்டியும் ஏதேனும் ஏற்பாடு செய்வார்கள்'' என்றான். பூங்குழலி போவதற்குத் தயங்கினாள். மறுபடியும் ஆழ்வார்க்கடியான், ''நான் சொல்வதைக் கேள். உன் அத்தைக்கு ஒன்றும் நேர்ந்திருக்க முடியாது. ஜனக் கூட்டத்தில் யாரோ தெரிந்த மனிதன் ஒருவனை உன் அத்தை பார்த்திருக்கிறாள். அவள் ஒரு திக்கையே கவனமாக நோக்கியதிலிருந்து ஊகிக்கிறேன். அதனாலேதான் கூட்டத்தோடு சேர்ந்து வந்தாள். இப்போதும் அவனைத் தொடர்ந்துதான் போயிருக்கிறாள் என்று தோன்றுகிறது. எப்படியும் கண்டுபிடித்துவிடலாம். நீ போய் முதன் மந்திரியிடம் சொல்லு!'' என்றான். பூங்குழலி முதன் மந்திரியின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள்.....

இதையெல்லாம் கேட்ட குந்தவை பெரிதும் கவலை அடைந்தாள். அநிருத்தர் அவ்வளவு கவலை கொண்டதாகத் தெரியவில்லை. ''பார்த்தீர்களா, இளவரசி! கலகப் பிசாசு எப்போது சந்தர்ப்பம் கிட்டும் என்று காத்துக் கொண்டிருப்பதை அறிந்து கொண்டிருக்கிறீர்களா? அருள்மொழி வர்மர் உயிரோடிருக்கிறார் என்று தெரிய வேண்டியதுதான். ராஜ்யமெங்கும் தீ மூண்டுவிடும்!'' என்றார்.

''தாங்கள் முதன் மந்திரியாயிருக்கும்வரையில் அப்படி ஒன்றும் நேராது. இப்போது, என் பெரியன்னையைப் பற்றிச் சொல்லுங்கள், நான் பயந்தது போலவே ஆகிவிடும் போலிருக்கிறதே! அவரை எப்படிக் கண்டுபிடிப்பது?'' என்று கேட்டாள்.

''அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். கோட்டைக்குள் வந்துவிட்டபடியால் இனி நான் அறியாமல் வெளியில் போக முடியாது. அதற்குத் தக்க ஏற்பாடு செய்து விடுகிறேன். தேடவும் ஏற்பாடு செய்கிறேன். இனி, சக்கரவர்த்தியைப் பார்க்காமல் மந்தாகினி தேவி இவ்விடம் விட்டுப் போகவும் மாட்டாள்!'' என்றார்.



## அத்தியாயம் 27

# பொக்கிஷ நிலவறையில்

ங்குழலி மந்தாகினி தேவியை விட்டுப் பிரிந்த இடத்தில் நாம் இப்போது அந்த மாதரசியைத் தொடர்வது அவசியமாகிறது. அவள் கூட்டத்திலும் குழப்பத்திலும் மறைந்துவிட்ட காரணம் பற்றி ஆழ்வார்க்கடியான் கூறியது உண்மையேயாகும். வேளக்காரப் படையுடன் தொடர்ந்து கோட்டைக்குள் பிரவேசித்த கூட்டத்தில் மந்தாகினி ரவிதாஸன் என்னும் சதிகாரனைப் பார்த்துவிட்டாள். ஏதேனும் ஒரு புலன் குறைவாயுள்ளவர்களுக்கு மற்றப் புலன் நன்கு இயங்குவது இயல்பல்லவா? மந்தாகினிக்கோ காது கேளாது; வாய் பேசாது. அவ்வளவுக்கு, அவளுடைய கண் பார்வை கூர்மையாயிருந்தது. ஆழ்வார்க்கடியானும், பூங்குழலியும் மந்தாகினி தேவியையே கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஆகையால் அவர்கள் கண்ணிற்குப் படாத ரவிதாஸன் மந்தாகினியின் பார்வைக்கு இலக்கானான்.

வரப் போகும் நன்மை தீமைகளை முன்னாலேயே அறிந்து கொள்ளக் கூடிய இயற்கையான உணர்ச்சி அறிவும் மந்தாகினிக்கு இருந்தது. ஆதலின் ரவிதாஸன் ஏதோ தீய காரியத்துக்காகவே இங்கே வந்திருக்கிறான் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். ஏற்கெனவே ஈழநாட்டில் அருள்மொழிவர்மனை ரவிதாஸன் கொல்ல முயன்றதையும் அவள் அறிந்திருந்தாள் அல்லவா? ஆதலின் கூட்டத்தோடு கூட்டமாகத் தஞ்சையின் வீதிகளில் சென்றபோது அவள் பார்வை ரவிதாஸனை விட்டு அகலவில்லை.

குழப்பத்தின் உச்சமான நிலையில் சின்னப் பழுவேட்டரையர் குதிரை மேலேறி வந்த சமயத்தில் ஜனக் கூட்டம் சடசடவென்று கலைந்ததல்லவா? அச்சமயம் ரவிதாஸனும் இன்னொரு மனிதனும் ஒரு சந்து வழியில் அவசரமாகப் புகுந்து செல்வதை மந்தாகினி பார்த்தாள். உடனே அந்தத் திசையைக் குறி வைத்து அவளும் வேகமாகச் சென்று அதே சந்து

வழியில் பிரவேசித்தான்.

இது நிகழ்ந்த ஒரு நிமிட நேரத்தில், ஜனக்கூட்டத்தினால் மோதித்தள்ளப்பட்ட திருமலையும் பூங்குழலியும் மந்தாகினியைக் கவனிக்க முடியவில்லை. பிறகு பார்த்ததில் அவளைக் காணவில்லை. மந்தாகினி சந்து வழியில் புகுந்த பிறகு இரண்டொரு தடவை திரும்பிப் பார்த்தாள், திருமலையும், பூங்குழலியும் வருகிறார்களோ என்று. அவர்களைக் காணவில்லை. ஆனாலும் ரவிதாஸனைத் தொடர்வதே முக்கியமான காரியம் என்று எண்ணிச் சென்றாள். இந்த வரலாற்றின் ஆரம்பத்தில் வந்தியத்தேவன் காலாந்தக கண்டரின் ஆட்களிடமிருந்து தப்பிச் சென்ற வழியிலேயே ரவிதாஸனும் அவனுடைய தோழனும் சென்றார்கள். ரவிதாஸனுடைய தோழனையும் முன்னம் நாம் சந்தித்திருக்கிறோம். திருப்புறம்பயம் பள்ளிப்படையிலே நள்ளிரவு சதிக் கூட்டத்திலே நாம் பார்த்த சோமன் சாம்பவன் என்பவன்தான் அவன்.

அவ்விருவரும் அதிவேகமாகச் சந்து பொந்துகளில் புகுந்து சென்றார்கள். ஆங்காங்கு விழுந்து கிடந்த மரங்களைப் பொருட்படுத்தாமல் தாண்டிக் குதித்துச் சென்றார்கள். மழைத் தண்ணீர் தேங்கியதால் ஏற்பட்டிருந்த சேற்றுக் குட்டைகளையும் கவனியாமல் சென்றார்கள். இன்னமும் இலேசாகக் காற்று அடித்துக் கொண்டிருந்தபடியால் மரக் கிளைகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. கிளைகளிலிருந்து அவ்வப்போது தண்ணீர்த் துளிகள் சலசலவென்று விழுந்தன. தங்களை யாரும் பின் தொடர்வார்கள் என்ற எண்ணமோ அவர்களுக்கு லவலேசமும் இல்லை. ஆகையால் அவர்கள் திரும்பிப் பாராமலே விரைந்து சென்றார்கள். திரும்பிப் பார்த்திருந்தாலும் மந்தாகினி தேவியை அவர்கள் பார்த்திருக்க முடியாது.

கடைசியில், அவர்களுடைய துரிதப் பிரயாணம் பெரிய பழுவேட்டரையருடைய அரண்மனைத் தோட்டத்தின் பின் மதில் ஓரத்தில் வந்து நின்றது. புயலினால் வேருடன் பறிக்கப்பட்ட மரம் ஒன்று அந்த மதில் மேலே விழுந்து முறிந்து கிடந்தது. ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் அந்த மரத்தின் மீது எளிதில் ஏறி மதிலைக் கடந்து அப்பால் தோட்டத்தில் குதித்தார்கள். அவர்கள் குதிப்பதைப் பார்த்த மந்தாகினி தேவியும் சிறிது நேரத்துக்கெல்லாம் அதே மரங்களின் மீது ஏறி அப்பாலிருந்த தோட்டத்தில் இறங்கினாள்.

ரவிதாஸன் சோமன் சாம்பவனைச் சற்றுத் தூரத்திலேயே நிறுத்தி விட்டுப் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையை அணுகினான். பெரிய பழுவேட்டரையரும் பழுவூர் இளைய ராணியும் இல்லாதபடியால் அரண்மனை சூனியமாகக் காணப்பட்டது. எனினும் பெண்களின் பேச்சுக் குரல் மட்டும் கேட்டது.

ஒரு முறை இரண்டு தாதிப் பெண்கள் அந்த மாளிகையின் பின் முகப்புக்கு வந்தார்கள். தோட்டத்து மரங்கள் பல முறிந்து விழுந்து கிடந்ததைப் பார்த்தார்கள். "ஆகா! அனுமார் அழித்த அசோக வனம் மாதிரியல்லவா இருக்கிறது?" என்றாள் ஒருத்தி. "நம்முடைய சீதாதேவி இங்கே இச்சமயம் இருந்திருந்தால், ரொம்ப மன வேதனைப் பட்டிருப்பாள்!" என்றாள் இன்னொருத்தி. சற்று நேரம் இவ்விதம் பேசிக் கொண்டிருந்து விட்டு அவர்கள் திரும்ப உள்ளே செல்லும் சமயத்தில் ரவிதாஸன் வாயைக் குவித்துக் கொண்டு ஆந்தைக் குரல் போன்ற ஒலி உண்டாக்கினான். தாதிப் பெண்கள் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். ரவிதாஸன் நன்றாக மறைந்து கொண்டிருந்தான். தாதிகளில் ஒருத்தி "பாரடி! பட்டப் பகலில் கோட்டான் கத்துகிறது! நேற்று அடித்த புயலில் ஆந்தைக்கும் புத்தி சிதறிவிட்டது!" என்றாள். இன்னொருத்தி ஒன்றும் சொல்லவில்லை.

சற்று நேரத்துக்கெல்லாம் மறு மொழி சொல்லாமல் சென்றவள் திரும்பி வந்தாள். பழுவூர் அரண்மனைக்கும் பொக்கிஷ நிலவறைக்கும் நடுவில் இருந்த வஸந்த மண்டபத்துக்கு வந்து சேர்ந்தாள். இந்த மண்டபத்திலேதான் வந்தியத் தேவன் பழுவூர் ராணியைச் சந்தித்தான் என்

பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். அங்கே வந்து நின்று அந்தத் தோழிப் பெண் தோட்டத்தை உற்றுப் பார்த்தாள். மறுபடியும் ஆந்தையின் குரல் கேட்டது. குரல் வந்த இடத்தை நோக்கி அந்தப் பெண் நடந்து வந்தாள். மரத்தின் மறைவிலிருந்து ரவிதாஸனும் முன்னால் வந்தான். காந்த சக்தி கொண்ட கண்களால் அவளை விழித்துப் பார்த்தான்.

''மந்திரவாதி! வந்து விட்டாயா? இளையராணி கூட இங்கே இல்லையே? எதற்காக வந்தாய்?'' என்று கேட்டாள்.

''பெண்ணே! இளையராணி அனுப்பித்தான் வந்திருக்கிறேன்!'' என்றான் ரவிதாஸன்.

''போன இடத்திலும் ராணியை நீ விடவில்லையா? இங்கே எதற்காக வந்தாய்? யாருக்காவது தெரிந்தால்......''

''தெரிந்தால் என்ன முழுகி விடும்?''

''அப்படிச் சொல்லாதே! சின்னப் பழுவேட்டரையர் எங்கள் பேரில் சந்தேகம் கொண்டிருக்கிறார். என்னை அழைத்து ஒருநாள் கடுமையாக எச்சரித்தார். மறுபடியும் மந்திரவாதி வந்தால் தம்மிடம் வந்து சொல்ல வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார்......''

''அவன் கெட்டான், போ! அவர்களுடைய காலமெல்லாம் நெருங்கி விட்டது. நீ ஒன்றும் கவலைப்படாதே! நிலவறையின் சாவி வேண்டும். சீக்கிரம் கொண்டு வந்து கொடு!'' என்றான் ரவிதாஸன்.

''ஐயையோ! நான் மாட்டேன்!''

''இதோ பார், உன் எஜமானியின் மோதிரம்!'' என்று ரவிதாஸன் இளைய ராணியின் முத்திரை மோதிரத்தைக் காட்டினான்.

''இதை நீ எங்கே திருடினாயோ, என்னவோ, யார் கண்டது?''

''அடி பாவி! என்னையா திருடன் என்கிறாய்? இளைய ராணியே என்னைக் கண்டு நடுநடுங்குவதைப் பார்த்து விட்டுமா இப்படிச் சொல்கிறாய்? பார்! இன்றிரவே ஒன்பது பிசாசுகள் வந்து உன்னை உயிரோடு மயானத்துக்குத் தூக்கிச் சென்று....''



''சிக்கனத்துக்கான யோசனைகளை வரவேற்பதாக மானேஜர் சொன்னார். 'உபயோகமில்லாத பொருட்களை வாங்கி ஏன்தான் பணத்தை வீணாக்குகிறீங்களோ'ன்னு கேட்டுட்டேன்!''

''அப்படி என்ன பொருட்களை மானேஜர் வாங்கியிருக்கார்?''

''ரெண்டு மாசம் முன்னாடி நெருப்பு அணைக்கும் சிலிண்டரை வாங்கி வந்தார்... அது இன்னி வரை உபயோகிக்கப்படவேயில்லை!''

— மகேந்திரநாத்.

''வேண்டாம், வேண்டாம்! உன் பிசாசுகள் எல்லாம் உன்னிடமே இருக்கட்டும். எனக்கென்ன வந்தது? இளைய ராணியின் மோதிரத்தைக் காட்டினால் நீ கேட்டதைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன். ஆனால் அவசரப்படாதே! தோட்டம் அழிந்து கிடப்பதைப் பார்க்க அடிக்கடி பெண்கள் இங்கே வருகிறார்கள். எல்லாரும் சாப்பிடும் சமயத்தில் நான் உன்னிடம் சாவியைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். அது வரை பொறுத்திரு...!''

''ஆகட்டும்; எனக்கும் கொஞ்சம் சாப்பாடு கொண்டு வா! சாப்பிட்டு இரண்டு நாட்கள் ஆகிறது. நிறையக் கொண்டு வா!'' என்றான் ரவிதாஸன்.

தாதிப் பெண் போன பிறகு ரவிதாஸனும் சோமன் சாம்பவனும் விழுந்து கிடந்த மரம் ஒன்றின் மேல் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் அறியாத வண்ணம் மந்தாகினியும் சற்றுத் தூரத்தில் மறைவான இடத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

ரவிதாஸனும் தாதிப் பெண்ணும்



## அருள்வாக்கு

காஷ்மீர் சால்வை அதுவே ஆனந்தம் தருவது என்றால் எக்காலத்திலும் ஒருத்தனுக்கு ஹிதமாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் அது எத்தனை விலை உயர்ந்ததாயிருந்தாலும், எத்தனை மழமழப்பாயிருந்தாலும் நல்ல கோடை காலத்தில் மேலே பட்டாலே தாங்காமல் தூக்கி எறிகிறோமே! அதனால் ஆனந்தம் அதிலேயே இல்லை என்று புரியத்தானே செய்கிறது? ஜ்வரக்காரனுக்கு நல்ல பக்ஷணமோ, ஐஸ்கிரீமோ ஆனந்தம் தருமா? சொல்லிக் கொண்டே போகலாம் — ஆனந்தம் வெளி வஸ்துவில் இல்லை என்று காட்டுவதற்கு. மனஸின் ஆனந்தமோ நிலையாய் இருப்பதேயில்லை. இதற்கு எத்தனை ஆனந்தமோ அதைப் போல ஆயிரம் மடங்கு அழுகை. இடுக்கு வழியாகத் துளித் துளி வெளிச்சத்தை உள்ளே விட்டு, பாக்கி முழுக்க இருட்டையே தருகிற பந்தல் மாதிரி துளித்துளி ஆனந்தத்தோடு ஏராளமான துக்கத்தையே மனஸ் தருகிறது. இதற்கு ஆதாரமான ஆத்மாவுக்குப் போனால்தான் சாச்வத ஆனந்தமென்பது.

ஜீவன், தானே நித்ய ஆனந்த ஸ்வரூபனான ஆத்மாவாக இருந்து கொண்டு, தாற்காலிக ஆனந்தங்களுக்காக வெளியே அலையாக அலைகிறான். இதைத் தன் வயிற்றுக்குள்ளிருந்தே வாஸனை எழும்புகிறது என்று தெரிந்து கொள்ளாத ஒரு கஸ்தூரி மான், வாஸனை உண்டாகுமிடத்தைத்தேடித்தேடித் திரிவதற்கு உபமித்து அத்வைத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

பேசியது ஒன்றும் அவளுக்குப் புரியா விட்டாலும் ஏதோ நடக்கப் போகிறதென்று ஊகித்துக் கொண்டாள்.

வெகு நேரம் கழித்து அத்தாதிப் பெண் திரும்ப வந்தாள். ரவிதாஸன் எழுந்து முன்னால் போனான். அவள் கொண்டு வந்திருந்த சோற்று மூட்டையையும் சாவிக் கொத்தையும் வாங்கிக் கொண்டான். பிறகு, வஸந்த மண்டபத்தை அடைந்து அங்கிருந்து பொக்கிஷ நிலவறைக்குச் சென்ற நடை பாதையில் இருவரும் சென்றார்கள். ஒரு சாவி, இரண்டு சாவி, மூன்றாவது சாவியையும் போட்டுத் திருப்பிய பிறகு, பூட்டுத் திறந்தது. நிலவறையின் உள்ளே ஒரே கும்மிருட்டாக இருந்தது.

ரவிதாஸனும் தாதிப் பெண்ணைப் பார்த்து, ''அடடா! ஒன்று மறந்து விட்டேனே! இந்த இருட்டறையில் விளக்கு இல்லாமல் எப்படிப் போவது? ஒரு விளக்காவது தீவர்த்தியாவது கொண்டு வா!'' என்றான்.

''பட்டப்பகலில் தீவர்த்தியும், விளக்கும் எப்படிக் கொண்டு வருவேன்? யாராவது பார்த்துச் சந்தேகப் பட்டால்?''

''அது எனக்குத் தெரியாது! உனக்கு அவ்வளவு சாமர்த்தியம் இல்லை என்றா சொல்கிறாய்? நான் நம்ப மாட்டேன். தீவர்த்தியாவது தீபமாவது கொண்டு வா! இல்லாவிடில் இராத்திரி பன்னிரண்டு கொள்ளி வாய்ப் பிசாசுகளை அனுப்பி...''

''ஐயையோ! சும்மா இரு! எப்படியாவது கொண்டு வந்து தொலைக்கிறேன்'' என்று கூறினாள் அந்தத் தாதிப் பெண்.

''அதற்குள் நானும்சாப்பிட்டுமுடிக்கிறேன்'' என்றான் ரவிதாஸன்.

தோழிப் பெண் அரண்மனையை நோக்கிச் சென்ற பிறகு ரவிதாஸனும் சோற்று மூட்டையுடன் தோட்டத்துக்குள் பிரவேசித்தான். சோமன் சாம்பவனிடம் வந்தான். அவனிடம் சோற்று மூட்டையைக் கொடுத்து, ''ஒரு வேளை இரண்டுமூன்று நாட்கள் நிலவறையிலேயே நீ இருக்கும்படி நேரலாம். சரியான சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் அல்லவா? ஆகையால் இந்தச் சோற்று மூட்டையை வைத்துக் கொள். வேலை எடுத்துக் கொண்டு என்னோடு சப்தமிடாமல் வா! அந்தப் பெண் தீவர்த்தி கொண்டு வரப் போயிருக்கிறாள். அதற்குள் நீ நிலவறைக்குள் புகுந்து விட வேண்டும்!'' என்று சொன்னான்.

இருவரும் துரிதமாகச் சென்றார்கள். மந்தாகினியும் அவர்கள் அறியாமல் பின் தொடர்ந்தாள்.

(தொடரும்)



# அடிமனத்தில் அச்சங்கள்...

ஜெயந்தி சுந்தரம்

"என்னடா, நித்யா... டல்லா இருக்கே?'' என்ற ராகவ்வை யோசனையோடு ஏறிட்டான் நித்யானந்தம்.

''வழக்கம் போல் வீட்டுல ப்ராப்ளமா?'' என்றான் மீண்டும் ராகவ்.

'ஆம்' என்ற விதத்தில் தலையை அசைத்தான் நித்யா. பிறகு சொல்ல ஆரம்பித்தான்.

''குழந்தையோட விளையாடிட்டிருந்தேன்.. ராகவ்.. விளையாட்டா என்னடா 'கரிவரதா' அப்படின்னு சொல்லப் போக, ஒய்ஃப் பிலுபிலுன்னு பிடிச்சுக்கிட்டா. 'உங்க மனசுல என்ன இருக்குன்னு தெரியும். என்னையும் என் குடும்பத்தையும் அட்டைக்கரின்னு மறைமுகமாச் சொல்லிக் காட்டறீங்க. நீங்க முள்ளங்கிக்குத் தோல் உறிச்ச மாதிரி வெளுப்புத்தான். அப்புறம் ஏன் என்னைக் கல்யாணம் செஞ்சுக்கிட்டீங்க?'ன்னு ஒரே புலம்பல். ஒண்ணுமே இல்லாத விஷயத்தை எப்படி ஆக்கிட்டா பாருடா... எனக்கு வந்த கோவத்துல ஆமாம் அப்படித்தான் வச்சுக்கயேன்னு சொல்லிட்டேன்...'' என்று முடித்தான்.

''போச்சுடா இன்னிக்கு மத்தியானம் வீட்லேர்ந்து காரியர் வராதுன்னு சொல்லு...'' என்று வரதன் சொல்ல, ஆபீஸ் சூழ்நிலையை மறந்து, சற்று அதிகப் படியாகவே இருவரும் சிரிக்க ஆரம்பித்தனர்.

''அது மட்டுமா.. இன்னும் ஒரு வாரத்துக்கு வீட்டுல 'ஓவர் டைம்' பார்க்கணும். குழந்தையைக் குளிப்பாட்டணும். ரேஷன் வாங்கணும். அடிக்கடி அவகிட்ட நீ ரெஸ்ட் எடுத்துக்கம்மா.. ரொம்ப இளைச்சுட்டியேங்கணும். வேண்டாத வேலையப்பா இதெல்லாம்'' என்றான் நித்யா அலுப்புடன்.

''அதுக்குத்தான்யா முதல்லயே பார்த்துப் பேசி ஒரு இரண்டு மாசம் பழகி அவளுக்குக் 'காம்ப்ளெக்ஸ்' ஏதாவது இருக்கான்னுட்டுத் தெரிஞ்சுக்கிடணும்...'' நிறுத்தினான் ராகவ்.

''ப்ச்'' என்றான் நித்யா சுவாரசியமின்றி.

''யேய்... இப்ப அலுத்துக்கிட்டு என்னடா செய்யறது. இங்க பாருப்பா தாழ்வு மனப்பான்மை இருக்கே ஒரு விதத்துல கான்ஸர் மாதிரி.. ஆளை அரிச்சுடும். இப்ப யோசிச்சு என்ன செய்யறதுப்பா, சரி சரி நான் 'லஞ்ச்

அவர்ல உன்னைப் பார்க்கிறேன்...'' சொன்னவன் பாண்ட் பாக்கெட்டில் கையை விட்டுச் சீப்பை எடுத்துத் தலைவாரிக் கொண்டான்.

ஃபைலைப் பிரித்து வைத்துக்கொண்ட போது நித்யாவுக்குத் தான் அவசரப்பட்டு விட்டோமோ என்று தோன்றியது.

இப்பொழுதெல்லாம் அடிக்கடி தனக்கும், மனைவிக்கும் சண்டை வருவது தவிர்க்க முடியாத ஒன்றாகி விட்டதை உணர்ந்திருந்தான் நித்யா.

இவன் மனைவி சித்ரா தூரத்து உறவு. குணம் தங்கம் என்றுதான் சொன்னார்கள்.

மிகவும் நல்ல குடும்பம் என வற்புறுத்தியதால் கல்யாணமும் நடந்து விட்டது. 'இப்படி ஒரு பிரச்னையா..? எனக்கு மட்டும் தானா?' — பலவிதமாகக் குழம்பித் தவித்தான் நித்யா.

வேலையில் முழுவதும் பிரச்னை விடை பெற்றது.

சாயந்திரம் வீட்டிற்கு வந்த போது சித்ரா வாசலிலேயே காத்திருந்தாள்.

பூப்பொட்டலத்தை நீட்டினான் நித்யா.

கண்கள் நிறைய சந்தோஷத்துடன் வாங்கிக் கொண்டாள் சித்ரா. 'அப்பாடா' என்றிருந்தது நித்யாவுக்கு.

ஒரு மாதத்திற்குப் பிறகு ராகவ் நான்கு நாட்கள் விடுமுறையில் சென்றான்.

திரும்பி வந்தவன் முகமெல்லாம் சந்தோஷம்.

கையில் சாட்சியாகக் கல்யாணப் பத்திரிகை.

''டேய்.. நித்யா... நீ கண்டிப்பா என் கல்யாணத்துக்கு வரணும்...'' பத்திரிகையை நித்யாவின் கைகளில் திணித்தான்.

''கண்டிப்பா வர்றேன்'' என்ற நித்யா, பத்திரிகையைப் பிரித்தபடி சொன்னான்: ''அட பத்திரிகை அட்டகாசமாக இருக்கே... பொண்ணு எப்படி...''

''அதை விட அட்டகாசம் போயேன்..! எனக்கு நிச்சயம் அதிர்ஷ்டம்டா...''

ராகவ்விடம் எதுவும் இப்பொழுது பேச வேண்டாம் என்று தோன்றியது நித்யாவுக்கு.

கல்யாணத்திற்கு நித்யாவால் போக முடியவில்லை.

வெளியூரில் கல்யாணம் என்பதோடு மட்டுமின்றிக் குழந்தைக்கு ஜுரம் வேறு.

மனைவியைத் தனியாக விட்டுப் போக முடியாத சூழ்நிலை.

ஆபீஸுக்கு வந்த போது ஆபீஸே களை கட்டியிருந்தது.

இன்று ராகவ் ட்யூட்டியில் ஜாயின் செய்து விட்டான்.

ராகவ்வைச் சுற்றி ஒரே கூட்டம்.

நித்யா கூட்டத்தை விலக்கி ராகவ்வின் கையைக் குலுக்கினான்.

''கங்கிராட்ஸ்டா... என்னால கல்யாணத்துக்கு வர முடியலே.. வீட்ல குழந்தைக்கு உடம்பு சரியில்லைடா... எப்படி நல்லா நடந்துதாடா கல்யாணம்...'' என்றான் நித்யா.

ராகவ் மிகவும் உற்சாகத்திலிருந்தான்.

நித்யா சொன்னது அவன் காதில் விழுந்திருக்குமோ என்பதே சந்தேகமாக இருந்தது.

பியூன் தாமஸ் கைகளில் கல்யாண ஆல்பம்.

டைப்பிஸ்ட் மஞ்சு ஓடிச் சென்று அதை முதலில் வாங்கிக் கொண்டாள். ஆல்பத்தைப் பிரித்தாள்.

''சார்... நீங்க போட்டோல ரொம்ப வித்தியாசமா தெரியறீங்க... என்ன...'', யோசித்தவள் மறு நிமிடம் கையைச் சொடுக்குப் போட்டாள்.

''ஹாங்... கண்ணாடி மிஸ்ஸிங்...!'' என்றாள்.

''எங்க... எங்க... நான் பாக்கறேன்... ஒரு செகண்ட் கண்ணாடியைக் கழட்டுங்க சார்னு கெஞ்சினப்ப மாட்டேன்னுவாரே.. இப்ப... கொண்டாங்க நான் பாக்க றேன்...'' என்றார் அக்கவுண்ட்டண்ட் ரங்கபாஷ்யம்.

எல்லோரும் ஏக காலத்தில் ராகவ்வை ஏறிட்டனர்.

''அது வந்து.. கண்ணாடி போட்டுக்கிட்டா கொஞ்சம் வயசு கூட ஆன மாதிரி தெரியுது... அதான் எல்லா ஃபோட்டோ, வீடியோவுக்கும் கண்ணாடியை கழட்டிட்டேன்.. இப்ப கான்டாக்ட் லென்ஸ் ஆர்டர் கொடுத்திருக்கேன். இன்னும் ஒரு வாரத்துல வந்துடும்'' என்றான் ராகவ்.

ஆல்பத்தை வாங்கிப் பார்த்தான் நித்யா. இளி கொஞ்சுகிற அழகுடன் ராகவ்வின் மனைவி! அருகே ராகவ். அவன் தன் சோடா பாட்டில் கண்ணாடியுடன் அவளருகில் நின்றிருந்தால் எப்படி இருந்திருக்கும் என்று அரை நிமிஷம் கற்பனை செய்தான் நித்யா.

தன்னுடைய தடிமனான கண்ணாடியைப் பற்றி இவனுக்குள்ளேயே காம்ப்ளெக்ஸ். இந்த லட்சணத்துல பிறருக்கு அட்வைஸ் வேறே—காம்ப்ளெக்ஸ் இல்லாத மனைவியைத் தேர்ந்தெடுப்பது எப்படின்னு...''

நித்யா தன்னைப் பார்த்து ஏன் இன்டலாகச் சிரிக்கிறான் என்று ராகவ்வுக்குப் புரிபடவே இல்லை.

# இன்று இறப்பு விழா

19

ராஜேஷ் குமார்

"ஏக்ஸ்க்யூஸ்மீ..." – விவேக்கிடம் சொல்லிக் கொண்ட, சஹாடே எழுந்து போய்க் கதவைத் திறந்து வெளியே நின்றிருந்த அந்த இளைஞனைப் பார்த்து மலர்ந்தார்.

"வா... ஷ்யாம்..." என்றார்.

அந்த ஷ்யாம் உள்ளே வந்தான். பழைய தேவ் ஆனந்த் முகம். நார் நாராய்த் தலை முடி. கனவுக் கண்கள். வரிவரியாய்ப் பைஜாமா மாதிரியான பேண்ட், ஷர்ட். "இஷ்யூ... ரெடியாயிருக்கா... ஸார்?" – கேட்டுக் கொண்டே வந்தவன் விவேக்கைப் பார்த்ததும் – பட்டென்று பேச்சை நிறுத்திக் கொண்டு – சஹாடேயை ஏறிட்டான்.

"ஸார்... யாரு...?"

சஹாடே சொன்னார்: – "க்ரைம் ப்ராஞ்ச்... ஒரு இன்வெஸ்டிகேஷனுக்காக வந்திருக்கார்..."

ஷ்யாம் முகம் மாறினான். நாற்காலியில் உட்காரப் போனவன் அப்படியே நின்றான். மெல்லப் புன்னகை செய்து கைகுலுக்கினான்.

"நான் ஷ்யாம். இந்த 'தண்டர்' பத்திரிகைக்கு சர்க்குலேஷன் மானேஜர்."



விவேக்புன்னகைசெய்தான்: "வசதியாப் போச்சு! பத்திரிகையோட சர்க்குலேஷன் சம்பந்தமாகத்தான் மிஸ்டர் சஹாராடேகிட்டே கேள்வி கேட்டுக்கிட்டு இருக்கேன்."

"எதுக்காக இந்த என்கொயரி ஸார்? "

"இது ஒரு ரகசிய விசாரணை. நான் கேட்கிறகேள்விகளுக்குமட்டும்நீங்கபதில்களைச் சொன்னாப் போதும். அதுவும் உண்மையான பதில்களா வேணும்.

"கேளுங்க... ஸார்.

"உங்க பத்திரிகைக்கு மொத்தம் எத்தனை சந்தாதாரர்கள் இருக்காங்கன்னு சொல்ல முடியுமா?"

ஷ்யாம் யோசிக்கக் கூட அவகாசம் எடுத்துக் கொள்ளாமல் — "ஆயிரத்து நானூற்று அறுபத்து நாலு பேர் ஸார்" என்றான்.

"சந்தாதாரர்கள் லிஸ்ட் தர முடியுமா?

ஷ்யாம் சஹாராடேயைப் பார்க்க, சஹாராடே தலையசைத்தார். மேஜையின் இழுப்பறையைத் திறந்து டைப் அடிக்கப்பட்ட கற்றைத் தாள்களை எடுத்தார். "அட்ரஸ் முழுக்க ஹிந்தியில்தான் இருக்கும். பரவாயில்லையா ஸார்...?

"நோ... பிராப்ளம்..." — விவேக் அதை வாங்கிப் புரட்டினான். பிரமிப்பாய் இருந்தது. 'இந்த ஆயிரத்து நானூற்று சொச்ச பேர்களில் எந்த நபர் 'தண்டர்' பத்திரிகையை உபயோகப்படுத்தி 'சாவ்தான்' பிரசுரங்களைக் கட்டியிருப்பான்?' இதை நிதானமாய்த்தான் பார்க்க வேண்டும்' யோசித்துக் கொண்டே சஹாராடேயை ஏறிட்டான்.

"இந்த மாதிரியான சின்னச்சின்ன பத்திரிகைகள் பம்பாயிலிருந்து வேற ஏதாவது வருதா...? "

வருது ஸார். சியர் பாம்பே, ந்யூஸ்ப்ளாஷ், குட்டே, பாம்பே ஈவினிங்க்ஸ்..."

விவேக் இடைமறித்துக் கேட்டான்.

"'சாவ்தான்'ங்கிற பேர்ல ஏதாவது பிரசுரம் வருதா...? "

"நான் கேள்விப்பட்டதேயில்லையே...!"

ஷ்யாம் தீர்க்கமான குரலில் சொல்ல — விவேக் எழுந்து கொண்டான். "இன்னும் இரண்டு நாள்ல இந்த லிஸ்ட் உங்களுக்கு வந்து சேரும்..."

சலனமில்லாத முகங்களோடு — சஹாராடேயும் ஷ்யாமும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.



**ம**தியம் மூன்று மணி.

அமைச்சர் காமோத்தும், கமிஷனர் ஹில்லும் நாற்காலியில் சாய்ந்து — எதிரே உட்கார்ந்து விவேக் சொல்வதை உன்னிப்பாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அறையில் ஏ. ஸி. கசிந்தது.

"ஸார்! பகதூர் வீட்டில் கண்டெடுத்த 'சாவ்தான்' பிரசுரங்களை பண்டலாகக் கட்டுவதற்கு உபயோகப்படுத்தப்பட்ட 'தண்டர்' பத்திரிகைக்கு மொத்தம் ஆயிரத்து நானூற்று அறுபத்தி நாலு சந்தாதாரர்கள். இவர்களில் யாரோ ஒரு நபர் இந்தியக் கழுகுகளின் குழுவில் இருக்கிறான். அவனை மட்டும் நாம் மோப்பம் பிடிக்க முடிந்தால்... பிரச்னைகள் ஒரு முடிவுக்கு வந்துவிடும்..."

காமோத் குறுக்கிட்டுக் கேட்டார்: "இந்த 'தண்டர்' பத்திரிகையைப் பகதூர் வெளியே இருந்துவாங்கியிருக்கமுடியாதா...? அதைப் படித்துவிட்டுத் தன்னிடம் இருக்கும் 'சாவ்தான்' பிரசுரங்களைப் பண்டலாகக் கட்டியிருக்கலாமே...? "

"நீங்கள் குறிப்பிட்ட இந்தச் சந்தேகம் எனக்கும் இருந்தது ஸார். ஒருவேளை பகதூர் அந்தப் பத்திரிகைக்குச் சந்தாதாரராக இருக்கக்கூடும் என்று நினைத்தேன். ஆனால் சந்தாதாரர் லிஸ்டில் பகதூர் பெயரோ — அவன் இருந்த வீட்டு விலாசமோ இல்லை. ஸோ... தண்டர் பத்திரிகை வேறு நபர் மூலம் அந்த வீட்டுக்குள் வந்திருக்கிறது."

அந்த ஆயிரத்து நானூற்று சொச்சம் சந்தாதாரர்களில் அந்த இந்தியக் கழுகு யார் என்பதை எப்படிக் கண்டுபிடிக்கப் போகிறோம்...? "

"சந்தாதாரர்களின் லிஸ்ட்டை 'க்ளாஸிபை' பண்ண வேண்டும் ஸார். ஃபேமிலி மெம்பர்ஸ், ஒண்டிக் கட்டைகள், ஆபீஸ் கோயர்ஸ், வேலைவெட்டி இல்லாத நபர்கள் — இப்படி லிஸ்ட்டில் இருப்பவர்களை வகைப்படுத்திக் கண்காணிக்க வேண்டும். இந்தக் கண்காணிப்பை மேற்கொள்ள ஒரு தனி போலீஸ் படையை



''ஆயிரம் வருஷங்களுக்கு முன்பெல்லாம் சினிமாவே இருந்திருக்காது...''

''எப்படிச் சொல்றே?''

''இருந்திருந்தா... நம்ம டி. வி. யிலே காட்டியிருப்பாங்களே...!''

— ரம்யசேகர்.

அமைத்து, அந்தப் படையில் நம் நம்பிக்கைக்குரிய போலீஸ் அதிகாரிகளை நியமிக்க வேண்டும்...''

''இந்தக் கண்காணிப்பு வெற்றி தரும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா... விவேக்...?''

''தூண்டிலைப் போட்டுப் பார்ப்பதில் தவறில்லையே ஸார்? '' விவேக் புன்னகையோடு சொல்லிக் கொண்டிருக்கும் போதே — அமைச்சர் காமோத்துக்குப் பக்கத்தில் இருந்த இண்டர்காம் கனைத்தது. அவர் சிக்கனமாய் ரிஸீவரை எடுத்து ''எஸ்'' சொல்லி மறுபக்கப் பேச்சைப் பத்து விநாடிகள் செவிமடுத்து விட்டு ''அனுப்புங்கள்'' — என்றார். பின் ரிஸீவரை வைத்துவிட்டு விவேக்கையும் கமிஷனரையும் ஏறிட்டபடி சொன்னார்.

''நம் திட்டப்படி இன்று இரவு எட்டு மணிக்கு இரண்டு ஒலிம்பிக் வீரர்களோடு பயணப்படப் போகும் விமானத்திற்குப் பைலட்டாகப் பணிபுரியப் போகிற ஜே. ஹெச். அலெக்சாண்டரை நாம் சந்திக்கப் போகிறோம். பிரதமரும், ஜனாதிபதியும் வெளிநாட்டில் பயணங்களை மேற்கொண்ட பல சமயங்களில் அவர்தான் பைலட்டாக இருந்திருக்கிறார். இந்திய அரசின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். பம்பாய் டாகூர் நகரில்தான் வீடு...''

காமோத் சொல்லிக் கொண்டிருக்கும் போதே — உதவியாளரின் பின்னால் மெலிதான நீலவர்ண சூட்டில் ஜே. ஹெச். அலெக்சாண்டர் உயரமாய், திடகாத்திரமாய் வந்தார். அமைச்சருக்கு நேரே வந்ததும் — அட்டென்ஷனில் நின்று — நெற்றியில் சல்யூட் பதித்துத் தளர்ந்தார்.

''பீ ஸிட்டட்...''

காமோத் குஷன் நாற்காலியைக் காட்ட — ஒரு நேர்க்கோடு மாதிரி உட்கார்ந்தார் அலெக்சாண்டர். அறிமுகம் செய்யப்பட்டுப் பரஸ்பரக் கைகுலுக்கலுக்குப் பின் விவேக் சொன்னான்:

''இது ஒரு ரகசியமான பயணம்...''

''தெரியும்...''

''திட்டம் சரிதானே...?''

''திட்டம் சரிதான். ஆனால் இந்தப் பயணத்திற்கு ஜகுவார் விமானத்தை உபயோகப்படுத்த முடியாது. இது யுத்த கால விமானம். ஒருவர் மட்டுமே போகக் கூடியது...''

''ஸாரி... ராணுவ விமானங்களைப் பற்றிய நாலெட்ஜில் நான் கொஞ்சம் வீக்... வேறு எந்த வகையான விமானத்தை உபயோகிக்கப் போகிறீர்கள்...?''

''பாரதிய வாயு சேனாவைச் சேர்ந்த விமானம் ஒன்றை இதற்காகப் பாதுகாப்பு அமைச்சகம் ஒதுக்கியுள்ளது...''

''காப்டன்! இந்தத் திட்டம் நிறைவேறுவதில் உங்களுடைய பங்குதான் முக்கியம். ஒலிம்பிக் வீரர்களைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பிப்பது உங்கள் கடமை.''

''இன்று எத்தனை பேர் விமானத்தில் இடம் பெறப் போகிறார்கள்...?''

''இரண்டு பேர். அர்ஜுன் கிருஷ்ணா, சுஷ்மா படேல்.''

''அவர்கள் ஏர்போர்ட்டுக்கு எத்தனை மணிக்கு வருவார்கள்?''

''எட்டிலிருந்து எட்டரை மணிக்குள்.''

''உங்களுடைய திட்டத்தை மறுபடியும் ஒரு தடவை ஆரம்பத்திலிருந்து — கொஞ்சம் விளக்கமாகச் சொல்லிக் கொண்டு வர முடியுமா...? '' அலெக்சாண்டர் கேட்க —

''வித் பிளஷர்...''

விவேக் தெளிவான ஆங்கிலத்தில் சொல்ல ஆரம்பித்தான்.

**ஹோ**ட்டல் காபிடல். இரவு மணி 7.50. மில்க் சொஸைட்டி வேன், ஹோட்டலின் பின்பக்கமாய் நின்றிருந்தது. கிச்சன் அறைக்குள் பேரர் யூனிபார்ம்களில் இருந்த அர்ஜுன் கிருஷ்ணாவும், சுஷ்மா படேலும் தங்கள் நெற்றிகளில் அரும்பிய வியர்வையை கர்ச்சீப்புகளால் ஒற்றிக் கொண்டே, கமிஷனர் ஹில்லும், விவேக்கும் மாறி மாறிச் சொன்னதை உன்னிப்பாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்கள். கண்கள் லேசான பயத்தில் நிரம்பியிருந்தன.

''திட்டத்தைக் கமுக்கமாய்ப் போட்டிருக்கிறோம். திட்டத்தில் கசிவு இல்லை. நீங்கள் பயப்படாமல் பயணப்படலாம்...''

''பைலட் ஜே. ஹெச். அலெக்சாண்டர் அசாதாரண துணிச்சல்காரர். உங்களைத் துபாய் ஏர்போர்ட்டுக்குப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பார்...''

''துபாய் ஏர்போர்ட் லௌஞ்சில் நீங்கள் இரண்டு பேரும் மூன்று மணி நேரம் தங்கியிருந்தால் போதும். அதற்குள் பம்பாயிலிருந்து நியூயார்க் போகும் விமானம் 'போயிங் 747' துபாய் ஏர்போர்ட் வந்து சேரும். நீங்கள் உடனடியாய் அதில் பயணப்பட்டு விடலாம். லண்டன் ஹீத்ரோ விமான நிலையத்தில் — உங்களை வரவேற்க இந்தியத் தூதர் காத்திருப்பார்.''

அர்ஜுன் கிருஷ்ணாவும் சுஷ்மா பட்டேலும், தலைகளை ஆட்ட, விவேக் — அறையின் மூலையில் கைகட்டி நின்றிருந்த வேன்

டிரைவரைக் கூப்பிட்டான்.

''சீத்தாராம்!''

''ஸார்...''

அவன் வேகவேகமாய் அருகில் வந்து நின்றான்.

''சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கா?''

''இருக்கு ஸார்...''

''வேன் ஹோட்டலுக்கு வெளியே போனதும், உன்னோட வழக்கமான ரூட்லதான் போகணும். மில்க் சொஸைட்டி காம்பௌண்ட் கேட்டுக்குள்ளே நுழைஞ்சு, காலியான 'பால் கேன்'களை இறக்கிவிட்டு அப்புறமா ஏர்போர்ட் போகணும்...''

''சொல்லியிருக்கீங்களே ஸார்.''

''வேனை எந்த வாகனமாவது ஃபாலோ பண்ற மாதிரி தெரிஞ்ச உடனே வேனைப் பக்கத்தில் இருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போயிடு...''

''சரி... ஸார்...''

விவேக் தன் மணிக்கட்டை உயர்த்திக் கடிகாரத்தைப் பார்த்தான்.

நேரம் எட்டு மணி.

''நம்முடைய திட்டம் ஆரம்பமாகிறது. மிஸ்டர் அர்ஜுன் கிருஷ்ணா! நீங்களும் சுஷ்மாவும் காலி பால் கேன்களை உருட்டிக்கிட்டே போய், வேன்ல ஏறிடுங்க...! சீத்தாராம்! நீ டிரைவிங் சீட்டுக்குப் போயிடு...''

சீத்தாராம் வேனை நோக்கி ஓட — அர்ஜுன் கிருஷ்ணாவும் சுஷ்மா பட்டேலும் சுவரோரமாய் வைக்கப்பட்டிருந்த காலியான 'பால் கேன்'களைத் தள்ளிக் கொண்டு நகர்ந்தார்கள். விவேக் வெளியே வந்து எட்டிப் பார்த்தான்.

ஹோட்டலின் சுற்றுப்புறம் நிசப்தமாய் இருந்தது. பெரும்பாலான அறை ஜன்னல்களில் இருட்டு ஒட்டியிருந்தது.

கதவுகள் திறந்து வைக்கப்பட்டிருந்த வேனின் பின்பக்கத்தில், 'காலி கேன்'களை ஏற்றிவிட்டு அர்ஜுன் கிருஷ்ணாவும், சுஷ்மா பட்டேலும் உள்ளே போனார்கள். கதவைச் சாத்திக் கொண்டதும், வேன் புகை கக்கிப் புறப்பட்டது. ஹோட்டலின் பின்பக்க காம்பௌண்ட் கேட்டைத் தாண்டியது. வேன் பார்வையிலிருந்து மறைந்ததும், விவேக்கும் கமிஷனர் ஹில்லும் ஹோட்டலின் முகப்புக்கு வந்து ரிசப்ஷன் கௌண்டரைத் தொட்டார்கள். டெலிபோன் ஆபரேட்டராக உட்கார்ந்திருந்த போலீஸ் துறை ஆசாமியிடம் விவேக் ஏர்போர்ட்டுக்கு இணைப்புக் கேட்டான். சில விநாடிகளிலேயே அவர் இணைப்பு வாங்கித் தர, பேசினான்.

''காப்டன் அலெக்சாண்டர்?''

''யுவர் குட் நேம் ப்ளீஸ்?'' — மறுமுனை கேட்டது.

''விவேக்.''

''ஒன் மினிட் ப்ளீஸ்...''

அரை நிமிஷ அவகாசத்திற்குள் — அலெக்சாண்டர் கிடைத்தார்.

''எஸ்...''



போலீஸ்காரர்: ஏன் ஸார், இது உங்களுக்கே நல்லா இருக்கா...மாசக்கடைசியும் அதுவுமா ஹெல்மெட்டோட வர்றீங்களே, நியாயமா...?

வந்தவர்: ?...?...?

— குகன்.

''அவர்கள் ஏர்போர்ட்டுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''நல்லது. எட்டரை மணிக்குள் வந்து சேர்ந்து விடுவார்களா?''

''கண்டிப்பாய்...''

''விமானம் இங்கே தயார் நிலையில் இருக்கிறது. எல்லாம் நல்லபடியாய் நடக்க வேண்டும் என்கிற தவிப்பு எனக்குள் ஆரம்பித்து விட்டது.''

''பி. காம்... விஷ்... யூ... ஆல்... த பெஸ்ட்! அவர்கள் ஏர்போர்ட் வந்து சேர்ந்ததும் என்னோடு போனில் தொடர்பு கொள்ளுங்கள்.''

''நிச்சயம்.''

விவேக் ரிஸீவரை வைத்தான்.

ரிசப்ஷன் அறையிலிருந்த சோபாவிலேயே — கமிஷனரும், விவேக்கும் காத்திருக்க ஆரம்பித்தார்கள். பெரிய முள் நொண்டியடித்து நிமிஷங்களை விழுங்க — சிறிய முள் — மணி ஒன்பதைக் காட்டிய போது — கௌண்டரில் இருந்த டெலிபோன் துடித்தது.

விவேக் பாய்ந்து ரிஸீவரை எடுத்தான்.

''எஸ்...''

''மிஸ்டர் விவேக்...?''

''ஆமாம்...''

''நான் அலெக்சாண்டர்...''

''என்ன காப்டன்...? அவர்கள் வந்து விட்டார்களா?''

''இன்னும் இல்லை'' — என்றார் அலெக்சாண்டர்.

(தொடரும்)

# கடைசி வரை...

கந்தசாமி கொண்டு வந்து நீட்டிய வருகைப் பதிவேட்டில் கையெழுத்து இடும் பொழுது நாகராஜன் நினைத்துக் கொண்டார்.

'இதுதான் இதில் நான் போடுகிற கடைசிக் கையெழுத்து' – இப்படி நினைத்த பொழுது அவருக்குச் சிரிப்பு வந்தது.

''என்ன சார் சிரிக்கிறீங்க?''

''நாற்பது வருஷமாப் போடற கையெழுத்து. இன்னிக்குக் கடைசி நாள் இல்லையா? அதை நினைச்சேன். சிரிப்பு வந்தது.''

''கடைசி நாள்னு எல்லாம் சொல்லாதீங்க ஸார்'' – பதிவேட்டை எடுத்துக் கொண்டு அவன் போய் விட்டான்.

அலுவலக வாழ்வைப் பொறுத்த வரை, அவருக்கு இது கடைசி நாள்தான். இந்த நாற்பதாண்டு காலத்தில் மாநிலத்தின் எல்லாப் பகுதிகளிலும் எத்தனையோ ஊர்களில் அவர் பணி ஆற்றி விட்டார். ஊர் ஊராக அடிக்கடி ஏற்பட்ட இத்தகைய மாற்றல்கள் சொந்த வாழ்க்கையில் எத்தனையோ துன்பத்தைக் கொடுத்திருந்த போதிலும் பணி வாழ்வில் அவை அவருக்கு ஏராளமான அனுபவ ஞானத்தையும் நற்பெயரையும் சம்பாதித்துக் கொடுத்திருந்தன.

கடன் இல்லாமல் இதுவரை வாழ்க்கையை எப்படியோ ஓட்டி விட்டார். என்றாலும், இத்தனை வருடங்கள் சம்பாதித்தும் சொந்தமாக ஒரு வீடு கூட அவரால் கட்டிக் கொள்ள முடியவில்லை. அவர் மனைவிக்கு இந்த ஒரு விஷயத்தில் மட்டும் அவரிடம் மனத்தாங்கல்தான்.

அவருக்கு இரண்டு பெண்களும் ஒரு பையனும். பையன் பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருக்கிறான். பெண்கள் படித்து முடித்து விட்டு, வேலை தேடிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் ஒருவருக்கும் கல்யாணம் ஆகவில்லை. ஓய்வுக்குப் பிறகு வரும் மொத்தத் தொகையைக் கொண்டு மூத்தவளுக்காவது திருமணத்தை முடித்து விட வேண்டும் என்று அவர் மனைவி கமலம் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

அவரைப் போன்ற பதவியில் உள்ளவர்கள் மாத வருவாய் தவிர, வேறு எப்படியெல்லாமோ சம்பாதித்துச் சொந்த பங்களாவுடனும் வேறு எத்தனையோ வசதிகளுடனும் இருக்கிறார்கள். ஆனாலும், நாற்பதாண்டு காலமாக எந்தவிதமான குறையும் சொல்ல முடியாத, தூய்மையாய்ப் பணியாற்றிய பெருமை நாகராஜனுக்கு இருக்கிறதே! இதை விடப் பெரிய சொத்து வேறு என்ன இருக்க முடியும்?

முந்திய தினம் மேசை மீதிருந்த கோப்புகளை எல்லாம் பார்த்து முடித்து விட்டுத்தான் அவர் வீட்டுக்குப் போயிருந்தார். இன்று அவர் ஓய்வு பெறப் போகிறார் என்பதால், அவரைச் சிரமப்படுத்த வேண்டாம் என்று நினைத்தோ என்னவோ மணி பன்னிரண்டு ஆகியும் யாரும் அவர் பார்வைக்கு எந்தக் கோப்பையும் அனுப்பவில்லை. அவர் மேசை காலியாகத்தான் இருந்தது.

எல்லாப் பிரிவுகளுக்கும் போய் எல்லாரிடமும் விடைபெற்றுக் கொள்ள வேண்டும். அதற்கே நிறைய நேரம் ஆகி விடும்.

யோசனையுடன் அவர் எழுந்து நின்றார்.

''ஏதாவது வேணுமா ஸார்?''

அறை வாசலில் ஸ்டூலில் உட்கார்ந்திருந்த கந்தசாமி எழுந்து வந்து விசாரித்தான்.

'வேண்டாம்' – என்று தலை அசைத்தார் அவர்.

முதலில் டைரக்டரைப் பார்த்து விட்டு, பிறகு மற்றப் பிரிவுகளுக்குச் செல்லலாம் என்ற நினைப்புடன் அந்த அலுவலரின் அறையை நோக்கி நடந்தார்.

''குட்மார்னிங் ஸார்...!''

''குட்மார்னிங். வாங்க மிஸ்டர் நாக

பீஷ்மன்

ராஜன். உட்காருங்க.''

டைரக்டருக்கு எதிரில் இருந்த நாற்காலியில் மிகவும் அடக்கமாக உட்கார்ந்தார் அவர்.

''உங்க சர்வீஸ் இந்தத் துறைக்கு இனிமேல் கிடைக்காதுன்னு நினைக்கவே கஷ்டமா இருக்கு. வி வில் மிஸ் யூ வெரி மச்.''

''எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலை. ஆனா... 'சூப்பர் ஆனுவேஷன்' ஆன பிறகும் வேலையிலே உட்கார்ந்திருக்க முடியுமா...? — உங்க 'கைடன்ஸை' எல்லாம் எப்பவுமே மறக்க முடியாது. சொல்லிட்டுப் போகத்தான் வந்தேன். நான் வரேன்.''

''விஷ் யூ எ ஹேப்பி அன்ட் பீஸ்ஃபுல் ரிடயர்டு லைஃப்.''

''தாங்க்யூ ஸார்.''

டைரக்டரின் பேச்சு மனத்துக்கு இதமாக இருந்தது. ஒவ்வொருவரிடமும் போய் அவர் விடைபெற்றுக் கொண்டு வந்தார். அவருடைய நேர்மையையும் திறமையையும் பாராட்டாதவர்களே இல்லை.

அவரிடம் நீண்ட நாட்கள் வேலை பார்த்த ஜோசப், ராம்குமார், ராஜசேகரன் ஆகியோர் கலங்கிய கண்களுடன் அவருக்கு விடை கொடுத்த பொழுது அவருக்கு நெஞ்சு நெகிழ்ந்து விட்டது.

ஐம்பத்தெட்டு வயது ஆகியும் கூட இன்று வரை எந்தக் களைப்பும் இல்லாமல் எல்லோரையும் விட மிகவும் சுறுசுறுப்பாக அலுவலகத்தில் இயங்கிக் கொண்டிருப்பவர்தான்



அவர். ஆனால் இன்று என்னவோ உடம்பு திடீரென தளர்ந்து போய்விட்டதைப் போல் உணர்ந்தார் அவர்.

அவருக்கு மிகவும் பரிச்சயமான அறைகள், ஆவணங்கள், கோப்புகள்... அங்கே பணி புரிபவர்கள்...!

இன்று மாலைக்குப் பிறகு — உறவு அறுந்து போன பின்பு — ஓ!... எல்லாமே அந்நியம் தான்!

இத்தனை ஆண்டுகளாக இருந்த சுவாதீனம் இனி கிடையாது.

இந்த நினைப்பில்தான் உடம்பு இப்படித் தளர்ந்து போய் விட்டதோ?

எல்லாப் பிரிவுகளுக்கும் போய் விட்டு அவர் இருக்கைக்குத் திரும்பும் பொழுது மணி இரண்டை நெருங்கிக் கொண்டு இருந்தது. நீண்ட தூரம் ஓடிக் களைத்து வந்த அலுப்புடன் தன்னிடத்தில் வந்து உட்கார்ந்தார்.










— சீர்காழி ஸ்ரீராம்

அவர் எவ்வளவோ மறுத்தும் கூட, இரண்டு மூன்று பிரிவுகளில் அவரை மிகவும் வற்புறுத்தி, காப்பியோ, டீயோ கொணரச் செய்து அவரை உபசரித்து இருந்தார்கள்.

வழக்கமாக, ஒன்றரை மணிக்கெல்லாம் கமலம் கொடுத்தனுப்பி இருக்கும் டிபன் டப்பாவைத் திறந்து, சாப்பிட உட்கார்ந்து விடுவார் அவர். இன்று பசி அடங்கிப் போய் இருந்தது.

இருந்தாலும், 'லஞ்ச் டைம்' முடிந்து வேளை கெட்ட வேளையில் சாப்பிடுவதா என்ன? கைப்பையிலிருந்து டிபன் பாக்ஸை எடுத்துத் திறந்தார்.

'உனக்கும் இன்னிக்கு ரிடையர்மென்ட்' என்று அதைப் பார்த்து மனத்துக்குள் சொல்லிக் கொண்டார்.

கமலம் கொடுத்தனுப்பியிருந்த இட்லியில் ஒரு விள்ளலை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளும் போது, "நான் வரலாமா?" என்ற குரல் கேட்டுத் தலைநிமிர்ந்தார் அவர்.

மதுரையில் வேலை பார்க்கும் அவருடைய ஜூனியர் — வாசுதேவன் சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தார்.

"வாங்க, வாங்க. டிபன் சாப்பிடறீங்களா?"

"இல்லை. இப்பத்தான் சாப்பிட்டுட்டு வர்றேன். டைரக்டரேட்டுக்கு ஒரு வேலையா வந்தேன். நீங்க இன்னைக்கு ரிடையராகிறது நினைவுக்கு வந்தது. பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்."

"தாங்க் யூ" என்று சொல்லிவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தார் நாகராஜன்.

"உங்களைப் போல் அனுபவம் உள்ளவங்கள்லாம் ஒவ்வொருத்தரா ஓய்வு பெற்றுப் போயிட்டிருக்கீங்க. ஒரு சந்தேகம்னா கேட்டுத் தெளிவு பெறக் கூட இனிமேல் ஆள் இருக்க மாட்டாங்க போலிருக்கு!"

"அப்படியெல்லாம் சொல்லிட முடியுமா?"

— இப்படிச் சொல்லி விட்டாலும் மனத்துக்குள் தம்மைப் பற்றிய பெருமையுணர்ச்சியில் ஒரு மகிழ்ச்சி தோன்றத்தான் செய்தது நாகராஜனுக்கு.

வாசுதேவன் மேசை மீது குனிந்து கொண்டு மெல்லிய குரலில் சொன்னார்:

"உங்க மாதிரி கறைபடாத கையை இனிமேல் பார்க்க முடியும்னு தோணலையே ஸார். அதை நினைச்சாத்தான் கஷ்டமா இருக்கு..."

நாகராஜன் இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

இதே வாசுதேவன் முன்னொரு நாள் ஒரு சிபாரிசுடன் தன்னை அணுகிய சம்பவம் அவர் நினைவுக்கு வந்தது.

அவர்கள் பணிபுரியும் துறை தொடர்

பான பரீட்சையின் விடைத் தாள்களைத் திருத்தும் பொறுப்பு அப்போது நாகராஜனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. விடுப்பு எடுத்துக் கொண்டு வீட்டில் தனி அறையில் உட்கார்ந்து அந்தப் பணியைச் செய்து கொண்டிருந்தார் அவர்.

அந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு நாள் மதுரையிலிருந்து அவர் வீடு தேடி வந்தார் வாகதேவன்.

''ஒண்ணுமில்லே. நமக்கு ரொம்ப வேண்டிய பையன்... பரீட்சை எழுதியிருக்கான். பேப்பர் உங்ககிட்டே வந்திருக்குன்னு கேள்விப்பட்டேன். பையன் அவ்வளவு சரியா எழுதலையாம்'' என்று இழுத்தார்.

விருட்டென்றுநாற்காலியில்இருந்துஎழுந்தார் நாகராஜன்.

''இந்த மாதிரி சிபாரிசுக்கு எங்கிட்டே வர உங்களுக்கு என்ன தைரியம் மிஸ்டர் வாகதேவன்? தயவு செய்து நீங்க இந்த இடத்தைக் காலி பண்ணுங்க...

''இல்லை ஸார். நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்க... பையனின் அப்பா ஊரிலேயே பெரிய புள்ளி...''

''நோ நோ... யூ கேன் கோ...''

காதைப் பொத்திக் கொண்டு வாசற்புறம் அவருக்குக்கையைக்காட்டினார்நாகராஜன்.

அந்த வாகதேவன்தான் இப்போது கறை படியாத கையைப் பற்றிப் பேசுகிறார்! வேடிக்கைதான்.

நாகராஜன் சாப்பிட்டு முடிக்கும் வரை உட்கார்ந்திருந்துவிட்டு, அப்புறம் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்று விட்டார் வாகதேவன்.

இன்னும் ஒரு பிரிவுக்குப் போய்ச் சொல்லிக் கொண்டு வரவேண்டும் என்பது நினைவுக்கு வந்தது நாகராஜனுக்கு. பக்கத்தில் தான் அந்தப் பிரிவு இருந்தது. மெதுவாக எழுந்து நடந்தார்.

பெரிய பெரிய பீரோக்களில் ஏராளமான பதிவேடுகளை அடுக்கி வைத்திருந்த அறை அது. அவர் நுழைந்தபோது அந்த அறையில் யாருமே இல்லை. எல்லா நாற்காலிகளும் காலியாக இருந்தன. சோர்வுடன் அங்கேயிருந்த நாற்காலியொன்றில் உட்கார்ந்தார் நாகராஜன்.வரிசையாகநின்றிருந்தபீரோக்களுக்குப் பின்புறம் பேச்சுக் குரல் கேட்டது.

''நாகராஜன் ஸார் இன்றைக்கு ரிடையர் ஆகிறார் தெரியுமில்லையா?''

''தெரியாம என்ன...? அதுதான் தடபுடலா பார்ட்டிக்கு ஏற்பாடு நடக்குதே! அதுசரி. இத்தனை ரூபாய் செலவழிச்சு 'கிப்ட்' வாங்கியிருக்காங்களே, அதைமட்டும் அவர் வாங்கிக்குவாராமா?''

''ரிடையர் ஆகிப் போறச்சேதானே கொடுக்கிறாங்க? வாங்கிப்பாரு எல்லாம்!''

''இவருக்குப் பதிலா வரப் போகிற ராகவன் இவரைப் போல் இல்லையாம். கொஞ்சம் கை நீளமாம்.''

''நல்லதாப் போச்சு. ஏதோ 'சம்திங்' கொடுத்தாவது காரியத்தைச் சாதிச்சுக்கலாம். இந்த ஆள் தானும் வாழாம மத்தவங்களையும் வாழ விடாமல் கழுத்தை அறுத்துட்டில்லே இருந்தாரு?''

நெஞ்சில் ஓங்கி அறைந்தாற்போல் இருந்தது நாகராஜனுக்கு.

''நிஜந்தான். பெரிய சத்திய சந்தன்னு நினைப்பு! — ஒரு சின்ன விஷயமின்னாலும் பெரிய 'ரூல்' பேசுவாரு. சொல்லப் போனால் இவராலே நம்மைப் போல உள்ளவங்களுக்கு இடைஞ்சல்தான். அதுசரி. அந்த ராகவன் ஸாரை உனக்குத் தெரியுமா?

— அதற்குமேல் அங்கே இருக்கப் பிடிக்கவில்லை நாகராஜனுக்கு. மெல்ல நடந்து தம் அறைக்குத் திரும்பி விட்டார்.

**மா**லை நாலு மணிக்கு — 'பார்ட்டி'க்கு அவரை அழைத்துப் போக வந்தார்கள். நாகராஜன் தமது பையை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்படத் தயாராகியிருந்தார்.

''சார்! ஏதோ எங்க அன்பின் அடையாளமா ஒரு சின்ன பார்ட்டிக்கு ஏற்பாடு செய்திருக்கோம்...''

தம்மை அழைக்க வந்தவர்களைக் கையமர்த்தி, தமது இயல்பான குரலில் உறுதியாகச் சொன்னார் நாகராஜன்:

''இங்கே இருந்த வரைக்கும் என் கடமையை நான் செஞ்சேன். அதுக்கு எதுக்கு உபசாரமும் விழாவும்...? தேவையேயில்லை. நான் வர்றேன்.''

அவர் கம்பீரமாக அலுவலக வாசலைக் கடந்த போது, பியூன் கந்தசாமி ரோஜா மாலையுடன் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான்.



**படத்தில் இருப்பவை என்ன என்று கண்டுபிடிக்க முடியுமா...?**
**... இல்லை! பரங்கிக் காய்கள் இல்லை...!**

**—60 ஆம் பக்கத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.**

# அன்பால் அற்புதங்கள் நிகழ்த்தும்

**ஊ**ருக்கு மத்தியில் மொட்டையாய் ஒரு கோவில். அங்கே போடப்பட்டிருந்த மேல் கூரையைப் பிரித்து, கட்டைகளை எல்லாம் சாராயம் காய்ச்சுவதற்கென்று எடுத்துப் போய் விட்டார்கள் ஊர் மக்கள். ஊரில் நாற்பதுக்கும் அதிகமான சாராயக் கடைகள். தெருக்களிலெல்லாம், அளவுக்கு மீறிக் குடித்துவிட்டுத் தடுமாறி, விழுந்து கிடக்கும் கிராமவாசிகள். ஒரு சராசரி இந்திய கிராமத்தின் சாதிப் பூசல், வறுமை, சுகாதாரமின்மை... மஹாராஷ்டிர மாநிலத்தின் வறண்ட பகுதியில், பூனா — அஹமத் நகர் பாதையில் சுமார் நூறாவது கிலோ மீட்டரில் உள்ள ராலேகான் சித்தி என்ற கிராமம் தான் ஒரு காலத்தில் இப்படி விளங்கியது.

ஆனால் இன்று... ராலேகான் சித்தியில் அத்தனை சாராயக் கடைகளும் இழுத்து மூடப்பட்டு விட்டன. பீடி, சிகரெட்... ஊஹூம்... மூச்! இங்குள்ள கடைகளில் அவை நிரந்தரமாகவே இல்லாத 'அயிட்டங்'களாகி விட்டன. காலை ஐந்தரை மணிக்குக் கிராமச் சிறுவர்களும் சில பெரியவர்களும் கோயில் மைதானத்தில் குழுமி உடற்பயிற்சி செய்கிறார்கள். பல வீடுகளுக்கும் பொதுவாக அமைக்கப்பட்டுள்ள சாண எரிவாயுத் தொட்டிகளிலிருந்து பெறும் எரிவாயுவைக் கொண்டு பெண்கள் உணவு சமைக்கிறார்கள். ஹரிஜனங்களும் இதர மக்களும் பேதமின்றி வாழ்கிறார்கள். — ஒரே பொதுக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்கிறார்கள். கோயில் கொண்டாட்டங்களில் கலந்து கொள்கிறார்கள் ......

— இந்த அற்புதமான மாற்றங்கள் நிகழக் காரணமாயிருந்தவர் கிஷன் பாபுராவ் ஹசாரே என்ற தனி மனிதர். ராலேகான் சித்தியிலேயே பிறந்து, வளர்ந்த ஹசாரே பள்ளிப் படிப்பைக் கூட முடிக்கவில்லை. குடும்பப் பொறுப்பை உணர்ந்து, தமது இருபதாவது வயதில் ராணுவத்தில் ஜவானாய்ச் சேர்ந்தார். இளம் வயதிலேயே வாழ்க்கைக்கு அர்த்தம் தேட ஆரம்பித்து, அது கிடைக்கப் பெறாமல், தற்கொலையின் விளிம்பைக் கூட எட்டிவிட்டார். ஆனால் சகோதரியின் திருமணப் பொறுப்பு நினைவுக்கு வர, தற்கொலை எண்ணத்தை ஒத்திப் போட்டார்.

இந்நிலையில்தான் ஒருநாள் டில்லி ரயில் நிலையத்தில் விவேகானந்தரின் நூல் ஒன்றை வாங்கிப் படித்தார் ஹசாரே. அந்தப் புத்தகம் தான் அவர் வாழ்க்கையையே மாற்றி அமைத்தது.

1965 — இல் இந்தியா — பாகிஸ்தான் யுத்தத்தின் போது ராணுவ வாகனம் ஒன்றை ஹசாரே ஓட்டிச் செல்ல, வாகனத்திலிருந்த அனைவருமே பாக் குண்டுக்குப் பலியானார்கள். இறைவன் அருளால் தாம் மட்டும் தப்பியது மக்களுக்குச் சேவை செய்யத்தான் என்ற முடிவுக்கு வந்தார் ஹசாரே. சேவை ஆரம்பிக்கப் பணம் தேவை என்பதை உணர்ந்து, பதினைந்து வருட காலம் பணியாற்றி, பணம் சேர்த்துக் கொண்டு ராலேகான் சித்திக்குத் திரும்பினார்.

நாற்பது சாராயக் கடைகளும் வீதியெங்கும் குடித்துவிட்டு மயங்கிக் கிடப்பவர்களுமாக இருந்த தமது சொந்தக் கிராமத்தைப் படிப்படியாக மாற்றும் திட்டத்தை வகுத்துச் செயல்படலானார்.

**மு**தன் முதலில் ஹசாரே மேற்கொண்ட பணி ஊர்க் கோயில் புனருத்தாரணப் பணிதான். ஓய்வு பெறும் தருவாயில் [illegible]

* புதிய பாதையில் இளைய கலை முனை.





# அண்ணா சாஹேப்!

ரம் ரூபாயை இப்பணிக்கு அப்படியே கொடுத்து விட்டார் அவர். இதனால் கிராம மக்களிடையே இவர் உடனடியாக மதிப்பும் மரியாதையும் பெற்றார். பலர் முன்வந்து நன்கொடை கொடுக்க, கிடுகிடுவென சீரமைப்புப் பணி முடிந்து, கோயில் புதுப் பொலிவு பெற்றது.

அடுத்து, ஹசாரே மேற்கொண்டது மிகக் கடினமான பணி — மதுவிலக்கு — மக்களின் நன்மதிப்பைப் பெற்ற அவர், மதுவின் தீமைகளை எடுத்துச் சொன்னதால் பலர் குடிப்பதை நிறுத்தினார்கள். உள்ளூர் சாராயக் கடைகள் மூடியதும் பழக்கத்துக்குக் கட்டுண்ட சிலர் பக்கத்து ஊர்களுக்குப் போய்க் குடித்துவிட்டு வந்தார்கள். இத்தகையோரைத் தண்டப் பிரயோகம் செய்து திருத்த ஹசாரே தயங்கவில்லை. இவருடைய நல்ல நோக்கத்தைப் புரிந்து கொண்ட ஊர்க்காரர்களும், தமது உறவினர்கள் குடித்துவிட்டு வந்ததற்காகத் தண்டிக்கப்பட்டால் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை.

''இன்றைக்கு எங்கள் ஊரில் குடிப்பவர்கள் இல்லை, பீடி, சிகரெட், புகையிலை—எதுவும் கிடையாது'' என்று மென்மையான குரலில் கூறும் ஹசாரேயை ராலேகான் சித்தி சென்று சந்தித்தோம். அதே கிராமத்தில் தமது பெற்றோர் வாழ்ந்தாலும், தாம் தனிக்கட்டையாகக் கோயிலில் ஓர் அறையில் தங்கிக் கொண்டு, ஊருக்காக உழைத்து வருகிறார். நல்ல உயரம். மற்றபடி ஓரளவு லால் பகதூர் சாஸ்திரியை நினைவூட்டும் சாயல். வெள்ளை பைஜாமா — குர்த்தா அணிந்த அவர் அருகிலிருந்த குழந்தைகளை அள்ளி அணைத்தபடி, ''நான் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் எனக்கு இரண்டு, மூன்று குழந்தைகள் பிறந்திருக்கும். என் குடும்பம், என் குழந்தைகள் என்று



அண்ணா சாஹேப்: அன்பால் ஆள்பவர்.



முதல் பணி ஆலயத்தை ஒட்டித்தான்...

பொழுது போயிருக்கும். ஆனால் இப்போது... நூற்றுக் கணக்கில் எனக்குப் பிள்ளைகள். அவர்கள் ஒவ்வொருவர் முன்னேற்றத்திலும் நான் சந்தோஷம் அடைகிறேன்'' என்று சொன்ன போது சிலிர்த்து விட்டது.

கிராமத்தைச் சுற்றி வந்தோம். ஹசாரே ஊர் மக்களைக் கொண்டே செய்வித்துள்ள பணிகள் பிரமிப்பூட்டின: ஆண்டொன்றுக்குப் பத்து அங்குலம் மழை கூடப் பெய்யாத ஊரில், தண்ணீரை மிகச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டியதன் அவசியத்தை மக்களிடையே எடுத்துச் சொல்லியிருக்கிறார். மழையின் போது தண்ணீர் ஓடும்



பொதுக் கழிப்பறைகளுடன் இணைந்த எரிவாயு தயாரிப்பு.



சூரிய ஒளி விளக்குக் கம்பம்.

காற்றாடி மூலம் தண்ணீர் இறைப்பு.



இடங்களில் 'செக் டேம்'கள் கட்டி, தண்ணீரைத் தேக்க வழி செய்திருக்கிறார். மக்களுக்கு நவீன விவசாய முறைகளைக் கற்றுக் கொடுத்துள்ளார். சொட்டு நீர்ப் பாசன முறையில் பல நிலங்கள் வளம் பெறுகின்றன. ஒரு காலத்தில் காய்ந்த நிலங்களாக இருந்தவற்றில் இப்போது கோதுமை முதல் பழ வகைகள் வரை, பலவிதமான பயிர்கள் சாகுபடியாகின்றன.

பத்தாம் வகுப்பு வரை கொண்ட பள்ளியில் வகுப்புகள் நடந்து கொண்டிருந்தன. சுமார் இரண்டாயிரம் ஜனத் தொகை கொண்ட ராலேகான் சித்தி கிராமத்தினர் ஒவ்வொருவருக்கும் இப்பள்ளி உருவானதில் நேரடிப் பங்கு உண்டு. அரசாங்கம் வழங்கிய ஐயாயிரம் ரூபாய் மானியத்தைக் கொண்டு கட்டடப் பொருட்களை வாங்கினார் ஹசாரே. அதன் பிறகு அஸ்திவாரம் தோண்டுவது முதல் கட்டடத்துக்குச் சுண்ணாம்பு அடிப்பது வரை கிராம மக்களின் சிரம தானத்தால் நடந்தேறியது. இதே முறையில் எழும்பியுள்ள பள்ளி ஹாஸ்டல் கட்டடத்தில் இன்று அக்கம்பக்கத்து ஊர்களைச் சேர்ந்த சுமார் 150 மாணவர்கள் தங்கிப் படிக்கிறார்கள்.

ஹாஸ்டல் கட்டடத்தின் மொட்டை மாடிக்கு அழைத்துப் போய்க் காட்டினார்கள், மாணவர்கள். அங்கே வரிசையாய், சூரிய ஒளியை, மின் சக்தியாக்கி நீரைச் சூடேற்றும் 'ஹீட்டர்'கள். ஹாஸ்டலுக்குச் சுலபமாக வெந்நீர் கிடைக்கிறது. இதே முறையைப் பயன்படுத்தித் தெரு விளக்குகளை எரியச் செய்யவும், பொது டி.வி.யை இயக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. தவிர, காற்றாடி (windmill) கொண்டு தண்ணீர் இறைக்கச் செய்யும் நவீனத்தையும் இங்கே கண்டோம். பொதுக் கழிப்பறைகளில் சேரும் கழிவுகளைக் கூட ஒரு தொட்டியில் சேகரித்து, அதிலிருந்து எரிவாயு தயாரித்துப் பயன்படுத்துகிறார்கள்.

**வ**றுமையில் உழன்று கொண்டிருந்த கிராமம் இத்தகைய நவீன வசதிகளை அமைத்துக் கொள்ள எங்கிருந்து பொருளாதாரம் பெற்றது...? அபரிமிதமான வட்டிக்குக் கடன் வாங்கி, லேவாதேவிக்காரர்களின் பிடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்த கிராம மக்களுக்கு உதவிக் கரம் நீட்டியது பாங்க் ஆஃப் மகாராஷ்டிரா. 1982 — இல் இந்த வங்கி இங்கு கிளை திறந்த போது வெறும் ஒரு லட்சம் ரூபாய் டெபாசிட்டே இருந்தது. இன்றைக்கு இருபத்தாறு லட்சம் டெபாசிட் இருக்கிறது. 1986 — இல் சுமார் முப்பத்தைந்து லட்சம் ரூபாயை ராலேகான் சித்தியின் மக்களுக்குப் பல்வேறு திட்டங்களின் கீழ் கடன் அளித்தது வங்கி. வங்கி மேலாளர் பூரே கூறினார்: "எங்கள் கிளையில் வாங்கிய கடன்களை மிக ஒழுங்காகத் திருப்பிச் செலுத்தியுள்ளனர் கிராம மக்கள். 'வங்கிக் கடன் மூலம் நாம் உயரலாம்; கடனைத் திருப்பிச் செலுத்துவதன் மூலம்

வங்கியும் வளர்ந்து, நம்மைப் போன்ற பிறருக்கு உதவும்' என்ற மனப்போக்குராலே கான் சித்தி மக்களிடையே காணப்படுகிறது. இந்த மனப்பான்மையை வளர்த்தவர் அண்ணா சாஹேப்தான்.''

கிஷன் பாபுராவ் ஹசாரேயை அன்பும் மரியாதையும் கலந்து, 'அண்ணா சாஹேப்' என்றே அழைக்கிறார்கள் ஊர் மக்கள். அவர் அன்புக் கட்டளைக்கு இணங்கி, ஊர் ஹரிஜனங்கள் பட்டிருந்த கடனை, இதர மக்கள் ஆளுக்குக் கொஞ்சமாகப் பணம் செலுத்தி அடைத்துவிட்டார்கள் என்றால் அப்புறம் என்ன சொல்ல...!

கிராமத்தின் இன்னொரு விசேஷ அம்சத்தையும் விவரித்தார் ஹசாரே. ''ஆண்டுதோறும் சமுதாயத் திருமணங்கள் நடத்தி வருகிறோம். ஒவ்வொரு தம்பதியும் கோயிலுக்கு ஆயிரம் ரூபாய் செலுத்திவிட்டுத் தாலிச் சரடுடன் வந்தால் போதும். இதர ஏற்பாடுகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். மாதாமாதம் ஒரு ரூபாயைக் கோயிலுக்குச் செலுத்தி வரும் குடும்பத்தினர் திருமணத்தின் போது வேறு கட்டணம் செலுத்தத் தேவையில்லை.''

**அ**ரசியல்வாதிகள், அமைச்சர்கள், கிராம விவகாரத்தில் தலையிடுவதை மக்கள் விரும்புவதில்லை. தேர்தலின் போது மட்டுமே இவர்கள் இக்கிராமத்துக்குள் வருகிறார்கள். ஊர் மக்கள் ஒன்றுகூடி, வேட்பாளர்களைச் சீர்தூக்கிப் பார்த்து, யாருக்கு வாக்களிப்பது என்று தீர்மானிக்கிறார்கள். இவர்கள் ஆதரிக்கும் வேட்பாளர் தோல்வியுற்றதும் உண்டு. ஹசாரே சொன்னார்: ''ஒரு முறை காங்கிரஸ் அல்லாத வேட்பாளரை நாங்கள் ஆதரித்தோம். ஆனால் காங்கிரஸ் வேட்பாளர் ஜெயித்து, மந்திரி சபையிலும் இடம் பெற்றுவிட்டார். எங்கள் பள்ளிக்கூடத்துக்கான அங்கீகாரம் தரும் விஷயத்தில் எங்களைப் பழிவாங்கும் விதமாக நடந்துகொண்டார். நாங்கள் ஒன்றிரண்டு போய்த்தர்ணா நடத்தினோம். உடனடியாய் அங்கீகாரம் கிடைத்துவிட்டது!''

**இ**ன்றைக்கு அண்ணா சாஹேப் ஹசாரே ரொம்ப 'பிஸி' மனிதர். மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலுமிருந்து மக்கள், தங்கள் கிராமப் புனரமைப்பு சம்பந்தமாக ஆலோசனை கேட்க அவரை நாடி வருகிறார்கள்.

''இந்தியாவின் முன்னேற்றம் என்பது தில்லி முன்னேறுவதால் மட்டும் வந்துவிடாது; 'பெல்லி' (கிராமத்துச் சந்து பொந்துகள்) முன்னேற்றத்தால் மட்டுமே அது சாத்தியமாகும்'' என்று அடிக்கடி கூறி வரும் அண்ணா ஹசாரேயின் பணிகளைப் பாராட்டித் தங்கப் பதக்கம் வழங்கியுள்ளது இந்திய அரசு.

பிரதமர் ராஜீவ் காந்தி வழங்கிய, சுமார் எழுபது கிராம் தங்கத்தால் ஆன அப்பதக்கம், கிராமத்தின் மத்தியிலுள்ள கோயிலில் பொதுச் சொத்தாக வைக்கப்பட்டுள்ளது. தங்கப் பதக்கம் வைக்கப்பட்டுள்ள அறையைப் பூட்டுவதே இல்லை! அதற்கு அவசியமே இல்லாமல் போய் விட்டது. ஒரு கிராமத்தின் உயர்வுக்கும், அக்கிராம மக்களின் பெருமைக்கும் இதைக் காட்டிலும் வேறு என்ன சான்று வேண்டும்?

கட்டுரை, படங்கள்: **மௌஷ்மி**

---

இன்ஸ்பெக்டர்: ஏம்பா, ஆறு வருஷம் கம்பி எண்ண வந்திருக்கும் அந்தக் கைதி என்ன தகராறு பண்றான்?

வார்டன்: கூட்டினா ஆறு வர்ற அதிர்ஷ்ட நம்பர்தான் வேணுமுன்னு அடம்பிடிக்கிறான் சார்!

— பாலு.









— ரா. ஞானமூர்த்தி

# 'கலைஞன் கர்வப்படலாம்' என்கிறாரே, கமலஹாசன்?

சாணக்கியம்

* சர்வப்படலாம்

* ரூ. 99,900.

* திணறல்

* புதிய பதவி.

* கடவுளை நம்புகிறார்?

* டி. சீனிவாசன், சென்னை — 79.

? மத்திய அரசின் ரயில்வே பட்ஜெட் பற்றி?

! பயணக் கட்டணம் உயரவில்லை, ஸீஸன் டிக்கெட் கட்டணம் உயரவில்லை என்று பாவலா பண்ணியிருக்கிறார்கள். தேர்தல் ஆண்டில் நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள இந்தச் சாணக்கியம். ஆனால் ஏறியுள்ள சரக்குக் கட்டணம், விலைவாசி உயர்வை ஊக்குவித்து, இன்னும் அதிகமான நஷ்ட கஷ்டத்தைப் பயணிகளுக்கு மட்டுமின்றி மற்ற எல்லோருக்குமே ஏற்படுத்தும். ஒரு வித்தியாசம், டிக்கெட் விலை ஏறினால் நேரடியாகப் பாதிக்கப்படுவோம்; இப்போது நடக்கப் போவது மறைமுக பாதிப்பு.

* அ. ஜெயவேல் முருகன், சாத்தூர்.

? ம. வி. யில் 'தி வோர்ல்ட் திஸ் வீக்' பார்த்தீர்களா?

! கண் விழிக்க நேர்ந்தாலும் அதற்கு நற்பலன் உண்டு.

* கே. வேல்சாமி, மதுரை — 9.

? 'கலைஞன் கர்வப்படலாம், தப்பில்லை' என்கிறாரே, கமலஹாசன்?

! அவர் சொன்னதில் தப்பில்லை. வித்யா கர்வம் என்பது வேறு; மண்டைக் கனம் வேறு. ஒன்று மற்றொன்றுக்கு வழி வகுக்கக் கூடாது.

* எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? தமது எம். எல். ஏ. பதவியை விற்று, அதன் மூலம் கிடைக்கும் பணத்தை ஊமைகள் — குருடர்கள் பள்ளிக்குக் கொடுக்கத் தயார் என்கிறாரே பாண்டியன்! இவர் கூறுவது போல் எம். எல். ஏ. பதவியை விற்க முடியுமா?

! அதானே! சட்டசபை உறுப்பினர்கள் யாரும் ஏன் உரிமைப் பிரச்னை எழுப்பவில்லை? ஆச்சரியம்தான்!

* செல்வன்ஜி, திருச்சி.

? எம். ஜி. ஆர். தபால் தலை வெளியிடுவதை மத்திய அரசு கொள்கை அளவில் ஏற்றிருப்பது பற்றி...?

! பாரத ரத்னா கொடுத்த பிறகு, 'முதுகில் குத்தி விட்டார்கள்' என்று கூச்சலிட்டவர்கள், தபால் தலை வெளியான பிறகு, 'தலையில் குத்துகிறார்களே' என்று கூச்சலிடாமல் இருந்தால் சரி.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? நாவலர் அரசியலை விட்டு விலகி விட்டாரா?

! விலகவாவது? விலக்கப்பட்டார்! மக்களின் தீர்ப்புக்குத் தலைவணங்கிப் பதுங்கியிருப்பவர், சில காலம் சென்று

வேறு ஓர் இடத்தில் முளைத்துத் தலை காட்டினால் வியப்பதற்கில்லை.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? ஒன்றுபட்ட அ. தி. மு. க. வைச் சட்டமன்றம் ஏற்றுக் கொண்டால்தான் ஜெயலலிதா சபைக்குள் நுழைவாராமே?

! நுழையாமலே இருந்தால் பதவி பறி போய்விடும். முன்பு எம். ஜி. ஆர். செய்து வழிகாட்டியிருப்பது போல் அவ்வப்போது தலைகாட்டிவிட்டுத் திரும்பலாம். என்றாலும், எதிர்ப்புப் பணியை ஒழுங்காக நடத்தாததற்கு இப்படி ஒரு சாக்குப் போக்குக் கூற வேண்டியதில்லை.

* பாபு, சேலம்.

? வி. பி. சிங்குக்குக் கிடைத்த ரூ. 99,900—க்கான யூ. டி. ஐ. செக் பற்றி?

! யூனிட் டிரஸ்ட் அஜாக்கிரதையாக இருந்தாலும் நல்லவேளை, வி. பி. சிங் சர்வ ஜாக்கிரதையாக இருந்து விட்டார். இப்போது கவலையெல்லாம் யூனிட் டிரஸ்டின் பங்குதாரர்களான பொது மக்களுக்குத்தான். இன்னும் என்னென்ன தவறுகள், திருட்டுக்கள் நடக்கின்றனவோ!

* ராஜா, கரியா கண்டனூர்.

? 'எம். ஜி. ஆர். மீது ஊழல் புகார்கள் குறித்து விசாரணை வைத்தால் சந்திக்கத் தயார்' என்று எஸ். டி. எஸ். கூறியுள்ளாரே?

! பத்திரிகை நிருபர்களின் கேள்விகளுக்கே பதில் சொல்ல முடியாமல் திணறிய இவரா? எம். ஜி. ஆரின் மானம் காக்க வேறு ஆளைப் பாருங்கள், ராஜா!

* ராதாகிருஷ்ணன், தென்காசி.

? எழுத்துலகில் வளர்கின்ற தலைமுறையினரான சத்தியப்பிரியன், நா. நாகராஜன், மும்தாஜ்யாசின், தமயந்தி, சரோஜி — வரிசைப்படுத்துங்கள்?

! வரிசைப்படுத்தி ரசிக்க ஆரம்பித்தால் எழுத்தை விட எழுத்தாளர்தான் மனத்தில் நிற்பார். வேண்டாம். எழுத்தை ரசியுங்கள் போதும். மேலும், சென்ற தலைமுறை எழுத்தாளர் கூட, புனை பெயரில் புது அவதாரம் எடுத்து, இளைய தலைமுறையில் இடம்பிடிக்க முடியும். தெரியுமோ!

* இந்திரா கோபாலன், திருச்சி. *

? மதத் தலைவருக்கு டாக்டர் வசதி செய்து கொடுத்தார்; சொந்த ஊரில் தெய்வ வேண்டுதல் செய்து திரும்பினார்; அவையில் 'ஆண்டவரே அறிவார்' என்றார் — இப்படி இருக்கையில் கருணாநிதி தாம் கடவுளை நம்புகிறவர்தான்

## நீங்கள் கேட்டவை — தராசு

என்று பகிரங்கமாகக் கூறினால் என்ன?

! இப்படி நீங்கள் அவரை மடக்கினால் முன்னதை மனிதாபிமானம் என்பார்; இரண்டாவதைப் பண்பாடு என விளக்குவார்; மூன்றாவதை நேற்று வரை நாட்டை ஆண்டவரைக் குறிப்பிட்டதாகக் கூறுவார். எதற்கு இதெல்லாம்? சொல்லை விடச் செயல் முக்கியம். அவரது செயல் உங்களுக்குத் திருப்தி அளித்தால் மகிழ்ந்துவிட்டுப் போங்களேன்!

* பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி.

? எழுத்தாளர் சாவிக்குக் கிடைத்துள்ள புதிய பதவி குறித்து?

! இயல் இசை நாடக மன்றத்தின் தலைவராகியுள்ள சாவி, எழுத்தாளர், பத்திரிகை ஆசிரியர் என்பதோடு கலாரசிகரும் கூட. விருப்பு வெறுப்பு இன்றிச் செயல்படக் கூடியவர். சிரித்துப் பேசும் இனிய சுபாவம் உள்ளவர். கலைஞர்கள் அனிச்ச மலர்களைப் போன்றவர்கள் என்பதை உணர்ந்து செயல்பட்டால் அவரது பதவிக் காலம் தமிழகத்தின் பாரம்பரியச் சிறப்புமிக்க கலைகளுக்குப் புத்துயிர் ஊட்டுவதாக அமையும். முக்கியமாக இளைய சமுதாயத்தினர் நமது கலைகளில் பெருமை கொள்ளுமாறு அவர் செய்ய வேண்டும்.

* ஆர். ரத்தினசாமி, புன்செய்புளியம் பட்டி.

? தமிழகப் பத்திரிகைகள், எதிர்க்கட்சிகளுக்குத் தெரியாமல் பல ஆண்டுகளாக நடந்து வந்துள்ள சாராய, நிலபேர ஊழல்கள் பற்றி...?

! தெரியாமல் ஒன்றும் இல்லை. சாராய ஊழல் அரசல்புரசலாகப் பலராலும் பேசப்பட்டு வந்த விஷயம்தான். ஆனால் சாட்சியம் இல்லாததால் எழுத முடியவில்லை. பொதுக்கூட்டத்தில் குற்றம்சாட்டிப் பேசமுடியவில்லை. இப்போது முதல்வர் சாட்சியத்தோடு சட்டசபையில் பேசியிருக்கிறார். ஐந்து நட்சத்திர ஓட்டல் கட்டுவதற்காக முன்பு உயிரியல் பூங்கா இருந்த நிலம் ஒதுக்கப்பட்டது குறித்து. "முதல்வரின் நண்பரென்றால் இத்தனை சலுகைகளா?" என்ற தலைப்பில் கல்கிதான் தமிழ்ப் பத்திரிகை உலகில் முதன் முதலில் அம்பலத்துக்குக் கொண்டு வந்தது. இப்போது அந்தச் சலுகைகளும் ரத்தாகி நிலம் மீட்கப்பட்டு விட்டது.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

திருமதி இந்திரா கோபாலன்,
D-4-65, பி. ஹெச். ஈ. எல். டவுன்ஷிப்,
கைலாசபுரம், திருச்சி — 14.

# ஓடிப்போனவர்

ஆபிஸிலிருந்து கிளம்பி ரகு நேராக ஜங்ஷனுக்குப் போனான். தனக்கும் மனைவி, குழந்தைகளுக்கும் ஹைதராபாத்திற்கு டிக்கெட் ரிசர்வ் செய்தான். குழந்தைகளுக்குக் கிறிஸ்துமஸ் லீவு விட்டிருந்தார்கள். நெடுநாள் விருப்பம் அவர்களுடைய இந்த ட்ரிப்...

வீட்டில் நுழைந்ததும் சொல்லக் கூடாது. கொஞ்சம் சஸ்பென்ஸ் கொடுத்துச் சொல்ல வேண்டும் என்று நினைத்தான்.

சந்தியாவின் முகம் எப்படி மலர்ந்து போகும் என்று கற்பனையில் தெரிந்தது. நிச்சயம் சுபாக்குட்டி கழுத்தின் மேல் ஏறிக் கொண்டு கூத்தாடும்.

ஆனால் அதற்கு எதிரிடையாக நடந்தது வீட்டில்... டிபன் சாப்பிட்டதும் மேஜையின் மீது டிக்கெட்டை எடுத்து வைத்தான்.

''கூபே ரிஸர்வ் பண்ணியிருக்கேன்.'' சந்தியாவின் விழிகளை ஊடுருவியது அவன் பார்வை. ''நாலு நாள் தான் இருக்கு. டிரெஸ்ஸெல்லாம் எடுத்துக்கோ சூட்கேஸில்.''

''ப்ச'' என்றாள் சந்தியா. அவள் கையில் ஓர் இன்லாண்டு கடிதம் படபடத்தது. ''இதை மொதல்ல படிங்க'' என்றாள்.

''அன்புள்ள ரகுவுக்கு, என் கடிதம் உனக்கு நிச்சயம் வியப்பாய் இருக்கும். நமக்குள் குடும்பத் தொடர்புகள் விட்டுப்போய்ப் பல வருஷங்கள் கழித்து இப்போதுதான் எழுதுகிறேன்.... இத்தனை நாட்கள் எழுதாதது என் குற்றமில்லை என்று உனக்குத் தெரிந்திருக்கும். நான் விலக்கி வைக்கப் பட்டவன். குடும்பத்திற்கு வேண்டாதவன். என்னுடைய எத்தனையோ கடிதங்களை உன் அப்பா, என் பெரிய தம்பி, புறக்கணித்திருக்கிறான். எனக்கும் ஆசைவிட்டுப் போய் எல்லாம் மறந்துவிட்டேன். உன் அப்பா அம்மாவின் மறைவு கூட எனக்கு நியூஸ் பேப்பர் பார்த்துத்தான் தெரியும்.

ரொம்ப வருஷங்களுக்குப் பிறகு எனக்கு ஓர் ஆசை கிளம்பியிருக்கிறது. உன்னோடு வந்து உன் வீட்டில் ஒருவாரம் தங்கவேண்டும் போலிருக்கிறது. என் தம்பிதான் என்னை வெறுத்து ஒதுக்கினானே தவிர, நான் அவனை வெறுக்கவில்லை.

கிறிஸ்துமஸ் சமயம் எனக்கு அங்கே வரவிருப்பம். நான் வருவதில் உனக்கு ஆட்சேபணை இல்லை என்றால் தெரிவி—நான் ரிட்டர்ன் டிக்கட் ரிஸர்வ் செய்ய வேண்டும்.

உனக்கு நான் வருவது ஒப்புதல் இல்லையென்றால் வருத்தப் படமாட்டேன். என் திருச்சிப் பயணத்தை ரத்து செய்துவிடுவேன். எதற்கும் பதில் எழுது.... அன்புடன், உன் பெரியப்பா, ராஜசேகரன்.''

''யாரு இந்தப்பெரியப்பா?'' என்றது ரகுவின் வாய் அனிச்சையாக.... ''இப்ப என்ன திடீர்னு உறவு?''

''அதுதாங்க...சின்னவயசிலேயேவீட்டை விட்டு வடக்கே ஓடிப் போயிட்டார்னு உங்கம்மா எப்பவோ சொல்லியிருக்காங்க. அவராகத்தான் இருக்கும்'' என்றாள் சந்தியா.

'இப்ப எதுக்கு நம்ம வீட்டுக்கு வரணும்?'' ரகு யோசித்தான். ''அப்பாவை விடப் பத்து வயசுப் பெரியவரா இருப்பார். அப்ப கிட்டத்தட்ட எழுபத்தஞ்சு வயசு இருக்கணும் அவருக்கு.''

''உறவுன்னு யாரும் இல்லையோ என்னவோ... வந்து அப்படியே நம்மளோட தங்கிடலாம்னு ஐடியாவா இருக்கும்.''

''இப்ப என்ன செய்யறது?'' விலாசத்தைக் கவனித்தான். மைசூர் என்று போட்டிருந்தது.

''பாவங்க... வயசானவரு... ஆசைப் பட்டுப் போட்டிருக்கார். வரச் சொல்லி எழுதிடுங்க'' சந்தியாவுக்குள் இப்படித் திடீர் திடீரென்று கருணை பெருக்கெடுக்கும். ''ஒரு வாரந்தானே இருக்கிறதா எழுதியிருக்காரு... கடைசிக் காலத்துலதான் இந்த மாதிரி ஆசையெல்லாம் கிளம்பும்னு சொல்வாங்க.''

''கடைசிக் காலமா.... அய்யய்யோ...., தொண்டு கிழம்ங்கிறியா சந்தியா... அதை வேறே வச்சிக்கிட்டு அவஸ்தை'' என்றான் ரகு.

''ஒரு வாரந்தானே... சமாளிச்சுடலாங்க... அவருக்கு ஆதரவா உறவு ஜனம் இருக்கோ இல்லையோ? இப்படித்தாங்க. எங்க மாமா வீட்டுக்குத் தூரத்து உறவுன்னு சொல்லிக்கிட்டு யாரோ ஒரு பெரியவர் வந்தாரு. கொஞ்ச நாட்கள் வச்சுப் பார்த்துக்கிட்டாங்க. வந்தவர் பொட்டுன்னு செத்துட்டாரு. கடைசியில பார்த்தா அவரோட சொத்து, லட்ச ரூபா வீடு எங்க மாமாவுக்கு வந்து சேர்ந்தது!''

சந்தியாவின் இரக்கத்திற்கு இப்போது காரணம் புரிந்தது. கோடி வீட்டு நரசிம்மன் கூடத் தன் வீட்டில் ஒதுங்கிய யாரோ ஒன்றுவிட்ட அத்தையை நன்றாகக் கவனித்துக் கொள்ள, கிழவி நரசிம்மன் பெயருக்கு ஒரு




கிரவுண்டு நிலத்தை உயிலில் எழுதிவிட்டான் என்பதை ரகு நினைவுபடுத்திக் கொண்டான்.

''வரட்டுங்க... ஹைதராபாத் என்ன... எப்ப வேணா போயிக்கலாம்'' என்றாள் சந்தியா. ரகுவுக்கும் சபலம் தட்டியது.

டிக்கெட் கேன்ஸலானது. பெரியப்பாவுக்குக் கடிதம் எழுதிவிட்டு ஒரு முதியவரை வரவேற்கத் தயாரானார்கள்.

"அப்பா யாருப்பா வரப் போறா?'' சுபா காலைக் கட்டிக் கொண்டு கேட்டாள்.

''தாத்தாம்மா... உன்னோட பெரிய தாத்தா.'' என்றான் ரகு.

''பெரிய தாத்தா தாடி வச்சிண்டிருப்பாளா?''

''தெரியாது.'' அதுவா முக்கியம்? இத்தனை நாட்களில் எவ்வளவு சேர்த்திருப்பார்?

''ஹியரிங் எய்ட்?'' என்றாள் சுபா தொடர்ந்து.

— தெரியவில்லை. பெரியப்பாவிற்குக் கண் சரியாகத் தெரியுமா? அவருக்கு முட்டி வலிக்குமா, ஆஸ்துமா உண்டா, மாத்திரை ஏதாவது வேண்டுமா, பணத்தையெல்லாம் ஃபிக்ஸட் டெபாசிட்டில் போட்டிருப்பாரா, குடும்பம் குழந்தைகள் உண்டா...? எதுவுமே தெரியவில்லை. இருபதாயிரமோ முப்பதாயிரமோ தேறினால் ஒரு பிளாட் வாங்கிப் போடலாம்...

பெரியப்பாவின் பெங்களூர் எக்ஸ்பிரஸ் வந்து சேர்ந்தது.

கூட்டமெல்லாம் கரைந்த பிறகு அந்த உயர்ந்த உருவம் தனித்துத் தெரிந்தது. கூர் நாசி. நரைத்த தலையில் வழுக்கையின் ஆதிக்கம். சிவந்த நிறம் — தன் அப்பாவின் வயதான சாயலாய் அவர்... ரகு அவரை நெருங்கினான்...

''ரகு!'' என்றார் அவர் பளிச்சென்று. சட்டென்று கையைப் பிடித்துக் கொண்டார். கரம் வலிமையாகவே இருப்பதாகப் பட்டது. கதகதப்பாகவும் இருந்தது.

''நான் ராஜசேகரன்'' அவர் கண்கள் ஏனோ பனித்தன. இரண்டு சூட்கேஸ், தோளில் ஒரு வாட்டர்பேக் மாட்டியிருந்தார்.

''எப்படிக் கண்டுபிடிச்சீங்க நான்தான் ரகுன்னு?'' — நடந்தார்கள். சூட்கேஸில் ஒன்றை அவரே சுமந்து வந்தார்.

''நீ எப்படிக் கண்டுபிடிச்சே நான்தான் ராஜசேகரன்னு?'' கண்ணைச் சிமிட்டிச் சிரித்தார்.

ஆட்டோவிலிருந்து தலையை நீட்டித் தெருவைப் பார்த்து, ''ஆண்டாள் தெருவா... எவ்வளவு மாறியாச்சு?'' என்றார். ரகு ஒருவித வியப்போடு அவரை ஏறிட்டான்.

வயதின் காரணமான தோல் சுருக்கங்கள் கூட அவருக்கு ஒரு களையாகவே இருந்தன. சிறிய வயதில் லட்சணமாக இருந்திருப்பார் என்று தோன்றியது.

''நமஸ்காரம்மா... நீதான் சந்தியாவா?''

## அடுத்த இதழில்...



# ஆண் வடிவத்தில் ஓர் அன்னை...

—கவர்ஸ்டோரி

என்றார். குழந்தைகளின் தலையை வருடி னார்.

அப்புறம் அந்த ஒரு வாரத்திற்குப் பெரி யப்பாதான் ஹீரோ.

மழமழவென்று ஷேவ் செய்த முகம். மடிப்புக் கலையாத முழுக்கைச் சட்டை. பேண்ட். தலையிலிருக்கும் நாலு முடியைப் பெரிதாய்ச் சீப்பால் வாரிக் கொள்வார்.

ராத்திரி கொஞ்சம் தியானம். மார்க் கெட்டில் நடக்கும் போது மிடுக்கான வேகம் – ரகு அவரை வியந்தான்.

மலைக்கோட்டைக்கும் வயலூருக்கும் உற் சாகமாய் வந்தார். ஒருநாள் காலையில் ஆம் லெட் கூடத் தானே சமைத்தார். குழந்தைக ளோடு உற்சாகமாய் ஸ்பைடர் மேன் பார்த் தார். சந்தியாவின் வற்றல் குழம்பை விசேஷ மாய்ப் பாராட்டினார்...

அவர்கள் எல்லோருக்குமே பெரியப் பாவை ரொம்பவும் பிடித்துவிட்டது. எப் போதாவது தன்னைப் பற்றிச் சொன்னார். இரண்டு பிள்ளைகள், ஒரு பெண்ணாம் அவருக்கு. பெண்ணுக்குக் கல்யாணமாகி விட்டது. பிள்ளைகள் நல்ல வேலையிலிருக் கிறார்கள். என்ன முயன்றும் பெரியப்பாவின் பண அந்தஸ்தை ரகுவால் மதிப்பிட முடிய வில்லை. வசதியானவர் என்றே தோன்றியது. அவ்வளவு வசதியானவர் என்றும் சொல்ல முடியவில்லை. ராணுவத்தில் இருந்தேன் என்றார். ஹோட்டலில் வேலை பார்த்தேன் என்றார்... எதற்காக இப்படித் திடீரென்று ஒரு பயணம்...? ரகுவும் சந்தியாவும் குழம்பி னார்கள்.

**அ**ன்று காலையில் தம் சூட்கேஸில் துணிகளை அடுக்கிக் கொண்டிருந்தார். அவர் வந்து ஒரு வாரமாகிவிட்டது என்று அப்போதுதான் நினைவு வந்தது அவர்க ளுக்கு.

''இன்னைக்கு ராத்திரி கிளம்பறேம்பா'' என்றார்.

''இருங்களேன் பெரியப்பா... இப்பத் தானே வந்தீங்க, என்ன அவசரம்?'' என் றார்கள் ரகுவும் சந்தியாவும் கோரஸாய்.

''முடியாதுப்பா. இதுவே அதிகம். மைசூர்ல கடமை அழைக்கிறது'' பெரியப்பா சிரித்தார். ''நானும் என் மனைவியும் 'கிரஷ்' நடத்தறோம். நர்ஸரி வச்சுச் செடிங்க வளர்க் கறோம். இப்ப ஒரு வாரம் பள்ளிக்கூடமெல் லாம் லீவு. நிறைய பெற்றோர் லீவுக்கு ஊருக்குப்போயிட்டாங்க. ஆதனால் நானும் ஜாலியாக் கிளம்பிட்டேன். இப்ப மறுபடி யும் குழந்தைங்க வர ஆரம்பிச்சுடும்... என் மனைவி இதுக்குமேல் எனக்கு லீவு தர மாட்டா .

ரகுவும் சந்தியாவும் ஆச்சரியமாகப் பார்த் துக் கொண்டனர்.

''எதுக்காகப் பெரியப்பா நீங்க வயசான காலத்துல இப்படியெல்லாம் சிரமப்பட ணும்...? உங்க பிள்ளைங்களோட போய் ஓய்வா இருக்க வேண்டியதுதானே?''

# 1989, மார்ச் 10ம் தேதி

586, ஒப்பண்ணக்காரத்தெரு,
கோயம்புத்தூர்-641 001
என்ற முகவரியில் திறக்கப்படுகிறது

**INDIA'S LARGEST PAID UP CAPITAL CHIT COMPANY**

# இந்து சிட்பண்ட்ஸ்
## (மதுரை) பிரைவேட் லிமிடேட்

**14** வது வருடம்

| சிட்டின் மதிப்பு ரூ. | மாத சந்தா ரூ. | | மொத்த மாதங்கள் |
|---|---|---|---|
| 10,000 | 100 | x | 100 |
| | 250 | x | 40 |
| 15,000 | 500 | x | 30 |
| 20,000 | 800 | x | 25 |
| 25,000 | 250 | x | 100 |
| | 625 | x | 40 |
| 50,000 | 500 | x | 100 |
| | 2000 | x | 25 |
| | 1000 | x | 50 |
| 1 லட்சம் | 1000 | x | 100 |
| | 2500 | x | 40 |
| 2 லட்சங்கள் | 5000 | x | 40 |
| 3 லட்சங்கள் | 6000 | x | 50 |

எமது புதிய சீட்டு குரூப்புகளில் சேர, விண்ணப்ப பாரங்கள் எமது எல்லா கிளைகளிலும் ரெசிடெண்ட் மேனேஜர்களிடமும் கிடைக்கும்.



## இந்து இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

பின் தேதியிட்ட வட்டிக் காசோலைகள் வேண்டுகோளுக்கிணங்க கொடுக்கப்படும்.

பிக்ஸட் டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன.

6 மாதங்கள் - 14% வட்டி
1 வருடம் - 18% வட்டி

ஒரு வருடம் அதற்கு மேலும் உள்ள டெபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான பரிசுகள் மற்றும் வட்டி கொடுக்கப்படும்.

நிர்வாக மற்றும் மத்திய அலுவலகம்.

**155, வடக்கு உஸ்மான் சாலை, சென்னை-600 017.**
**போன்: 445529 டெலக்ஸ்: 8868 TANX IN**

கிளைகள்

- 220, N.S.C. போஸ் ரோடு, 2வது மாடி ஜார்ஜ்டவுன், சென்னை-600 001 போன்: 585901 & 585178
- 154, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர் சென்னை-600 017. போன்: 447888 & 447333
- 586, ஒப்பண்ணக்காரத்தெரு, கோயம்புத்தூர்-641 001
- 194, வக்கீல் புதுத்தெரு, மதுரை-625 001. போன்: 34940 & 31351
- 22, வணிகர் தெரு, காஞ்சிபுரம் - 631 501 போன்: 3048
- 106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606601 போன்: 2681

**விண்ணப்ப பாரங்களும், பரிசுகளும் எமது கீழ்க்கண்ட ரெஸிடண்ட் மேனேஜர்களிடமும் கிடைக்கும்:**

நெய்வேலி:திரு.G.இளங்குமரன், பிளாக்-2 D-22, மாணிக்கவாசகர் ரோடு கடலூர் திரு. D.சண்முகம், M/s. மீனா ஜுவல்லர்ஸ், 2, லாரன்ஸ் ரோடு, சிதம்பரம்: திருமதி.V.விசாலம், பேராசிரியர்களின் தற்காலிக குடியிருப்புகள் அண்ணாமலை நகர், மயிலாடுதுறை திரு. J. சந்திரசேகரன், 73, செட்டித்தெரு, திருவாரூர்: திருமதி. T. சாந்தி, 16, ஐயனார்கோவில் தெரு கும்பகோணம் திரு.T.சுவாமிநாதன், 8ஹெட்போஸ்ட் ஆபிஸ்ரோடு, போன்:21789, விழுப்புரம்: திரு. ஹாசன் பெய்க், V.V.A. பில்டிங், ஹரிந்துங்தாண்டவர், திருச்சி ட்ரங்க் ரோடு, திருச்சி திரு. S. ராஜசேகரன், A.K.C.இல்லம், சரஸ்வதி நர்சிங்ஹோம் எதிரில், சாலை தெரு, திருச்சி-18, திரு.T.S. அனந்த கிருஷ்ணன், 178, கணபதிகாலனி, T.V. கோயில், திருச்சி-5, திண்டுக்கல் திரு.அப்துல் சலீம், 15, நன்னுப்பாசாகிப் தெரு, நாகர் கோவில்: திரு. N.S.சுரேந்திரன், பங்கஜ் இல்லம் வெள்ளாளத்தெரு, எடலக்குடி, போன்: 3370 பொள்ளாச்சி: திரு.V.R. விசுவநாதன், 493, Dr. அன்சாரி தெரு, குன்னூர் திரு. K.K. லிங்கம் 21, கிளைவ் ஹில், போன் :7054 ராணிப்பேட்டை: திருமதி R. வசந்தி ராம்நிவாஸ், பாரதிநகர், சிப்காட்.

**GROW RICH WITH INDU**



படத்தில் காணப்படுபவை சபரி மலை 'சீசனி'ன் போது சாஸ்தா கோயில் உண்டியலில் சேர்ந்த காணிக்கை! மொத்த காணிக்கையையும் சிறுசிறு மூட்டைகளாகக் கட்டிக் கழுதை மீது ஏற்றி, கீழே எடுத்து வருவார்கள். படத்தில் மூட்டைகள் கீழே இறங்கத் தயார் நிலையில் உள்ளன. ஒவ்வொரு மூட்டையின் மீதும் அரக்கு 'சீல்' வைக்கப்பட்டுள்ளது.

புதிர்: மௌலி.
படம்: அழ. காசி விஸ்வநாதன்

பெரியப்பா சிரித்தார். ''ஓய்வா? மனுஷனுக்கு ஓய்வு எங்கே தெரியுமா? கல்லறையில்தான்... அதுவரைக்கும் ஓடிக்கிட்டே இருக்கணும் சக்கரமாட்டம்.''

பெரியப்பா ஸோபாவில் வந்து ரகுவுக்கும் சந்தியாவுக்கும் நடுவில் அமர்ந்து கொண்டார்.

''ரகு, சின்ன வயசில நான் ஓடிப் போயிட்டேன்னு கேள்விப்பட்டிருப்பே... இன்னமும் கூட நான் ஓடிக்கிட்டேதான் இருக்கேன்... வேலையில. நான் பார்க்காத வேலையில்லே ரகு. பாத்திரம் கழுவியிருக்கேன். சமைச்சிருக்கேன். சேல்ஸ்மேனா ஓடியிருக்கேன். ராணுவத்தில் சேர்ந்து ஓடியிருக்கேன். பிஸினஸ் பண்ணி அனுபவப்பட்டேன்... பிள்ளைகளைப் படிக்க வைச்சு, பொண்ணைக் கட்டிக் கொடுத்து... ஆரம்பத்திலே ரொம்பச் சிரமப்பட்டேன்... ஏழையாயிருந்த என்னைக் கண்டு பயந்து, உறவுக்காரங்கள்லாம் என்னை ஒதுக்கினாங்க. கலப்புத் திருமணம் செஞ்சுக்கிட்டேன்னு ஒரு சாக்கு சொல்வாங்க... அதெல்லாம் சும்மா... எங்கே நான் உதவின்னு வந்து ஒண்டிக்கிடுவேனோன்னு பயம்... ஆரம்ப காலத்திலே உதவின்னு கேட்டிருக்கேன். அதனாலத்தான் சுத்தமாக ஒதுக்கிட்டாங்க... நான் அனுபவப்பட்டேன்... ஒண்ணே ஒண்ணுதான் என்னோட பாடம் — யார் கையையும் எதிர்பார்க்கக் கூடாது. சாகிற வரைக்கும் எந்த வகையிலேயாவது உழைச்சுக்கிட்டே இருக்கணும்... அதனாலதான் நான் என் பையனையே எதிர்பார்க்கிறதில்லை. இன்னமும் என் காசிலேதான் நானும் என் மனைவியும் சாப்பிடறோம்.''

ரகுவுக்கும் சந்தியாவுக்கும் சுருக்கென்றது. அடுத்தவரின் கையை எதிர்பார்க்காத பெரியப்பாவின் காசைத் தாங்கள் கணக்குப் போடலாமா? ரகுவுக்குப் பெரியப்பாவின் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே கூச்சமாக இருந்தது...

**பெ**ரியப்பாவின் வண்டி புறப்படத் தயாரானது.

''எனக்கு நம்பிக்கை இருந்துச்சு ரகு... என் தம்பிங்க என்னை ஜாதி, அது, இதுன்னு காரணங்காட்டி ஒதுக்கிட்டாலும் இளைய தலைமுறை நீங்க ஆரோக்கியமான கண்ணோட்டத்தோட இருப்பீங்க அப்படின்னு நான் நினைச்சேன். அந்த நம்பிக்கையிலதான் பல வருஷம் கழிச்சு என் ஊருக்கு, உன் வீட்டுக்கு வந்தேன்... உன் பெரியம்மா கூட சந்தேகப்பட்டா... நீங்க என்னை எப்படி ஏத்துப்பீங்களோன்னு... நீங்களும் என் வீட்டுக்கு இனி வரணும்... வர்றீங்களா?'' ரகுவின் கையைப் பற்றிக் குலுக்கினார்.

சுபாவும் சந்தியாவும் பெரிதாகத் தலையாட்டினார்கள். வீட்டிற்குத் திரும்பியதும் அலமாரியைத் திறக்க, பெரியப்பாவுக்கென்று வாங்கி வைத்து, அவர் பயன்படுத்தாத மருந்துப் பாட்டில்கள் தங்களைப் பார்த்து ஏளனமாகச் சிரிப்பது போல ரகுவிற்குத் தோன்றியது.

''பெரியப்பா ஓர் இளைஞர்... எழுபத்தி அஞ்சு வயசுல நம்ம எல்லாரையும்விட நேர்மையான இளைஞர்... இல்லை?'' என்றாள் சந்தியா.




— கமுதி எஸ். சேதுராமன்.

# பார்சலில் தலைவர்கள்!

ஹாலந்து நாட்டின் தபால் துறை, ஒரு பெண்மணியின் விருப்பத்துக்கு இணங்கி, அவளைப் பார்சல் செய்து வேறு ஊரில் உள்ள அவளது தாய்வீட்டுக்குப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்த்தது!

— செய்தி.

9

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI

ராஜ்மோகன் காந்தி

## சுதந்திரக்கட்சி:

# பலமும் பலவீனமும்

சுதந்திரக் கட்சி தோன்றி வளர்ந்த போது, வலது சாரிக் கொள்கை உடைய வேறு கட்சியே நாட்டில் இருக்கவில்லை என்று கூறிவிட முடியாது. சியாமபிரசாத் முகர்ஜியினால் தொடங்கப்பட்ட ஜன சங்கம், வடக்கேயும், மத்திய இந்தியாவிலும் கணிசமான செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆனால் சுதந்திரக் கட்சிக்குக் கூடுதலான சில அனுகூலங்கள் இருந்தன.

ராஜாஜி தவிர என். ஜி. ரங்கா, வி. பி. மேனன் போன்ற தென்னகத் தலைவர்கள் அதில் சேர்ந்திருந்தார்கள். அவர்களுடைய மாநிலங்களில் ஜனசங்கத்தின் செல்வாக்கு மிகக் குறைவு. மசானி சக்தி வாய்ந்த பேச்சாளராக, சுதந்திரக் கட்சிக்குக் கிடைத்திருந்தார். பழுத்த காங்கிரஸ்வாதியும் மிகவும் மதிக்கப்பட்ட வழக்கறிஞருமான கே. எம். முன்ஷி, முதலில் பம்பாய் மாகாணத்தில் உள்துறை அமைச்சராகவும் பின்னர் மத்தியில் உணவு மந்திரியாகவும் அப்புறம் உ. பி. கவர்னராகவும் பணியாற்றிவிட்டு, இப்போது சுதந்திரக் கட்சியின் துணைத் தலைவராகப் பொறுப்பேற்றிருந்தார். இதனாலெல்லாம் ஜனசங்கத்துக்குக் கிட்டாத அனுகூலங்கள் புதிய சுதந்திரக் கட்சிக்குக் கிடைத்தன. மேலும் ஜன சங்கம் தீவிர ஹிந்துமதச் சார்புள்ளதாக விளங்கியது. சுதந்திரக் கட்சியோ 'கன்ஸர்வேடிவ்' கொள்கை உடையதாக இருந்த போதிலும் எம்மதமும் சம்மதம் போன்ற அம்சங்களில் முற்போக்குக் கருத்துக்களைக் கொண்டிருந்தது. இதனால் ஹிந்துக்கள் அல்லாதவர்களும் மிதவாதிகளான ஹிந்துக்களும் சுதந்திரக் கட்சியின் பக்கம் சேர்க்கப்பட்டனர். 'அரசு தன்னிடம் அளவுக்கு மீறிய அதிகாரங்களைக் குவித்துக் கொள்வதுதான் அடிப்படையான தொல்லை' என்று ஸி. ஆர். பிரச்னையைச் சுட்டிக்காட்டியது ஏராளமான வர்த்தகர்கள், விவசாயிகள், தொழிலதிபர்களைக் கவர்ந்தது. மேலும் நில உடைமை பற்றிய காங்கிரஸின் நாகபுரி தீர்மானத்தைச் சுதந்திரக் கட்சி தனக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொள்ள நல்ல வாய்ப்பு இருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக ராஜாஜியின் தலைமை சுதந்திரக் கட்சிக்கு ஒரு பெரிய கௌரவத்தையும் மேன்மையையும் அளித்தது. இது மற்ற எதிர்க் கட்சிகளுக்குக் கிடைக்க முடியாத ஒன்றல்லவா? எனவே முக்கியப்பட்டவர்கள் பலர் சுதந்திரக் கட்சியில் சேருவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. அவ்வாறே சேரவும் செய்தார்கள். ஆனால் முக்கியப்பட்டவர்கள் எவ்வளவுதான் இருந்தா



* முன்ஷி



* பி. கே. தேவ்



* காயத்ரி தேவி



* மோடி

* ரத்னசாமி





* எச். எம். பட்டேல்



* டாண்டேகர்


ஹோமி மோடி


ஏ. டி. ஷ்ராஃப்

லும் அவர்கள் மக்கள் தொகையில் பெரும்பான்மையினராகி விட முடியுமா, என்ன? சோஷலிஸ கோஷம் — அது மனப்பூர்வமாக எழுப்பப்பட்டதோ அல்லது வெறும் வாய்ப்பந்தல்தானோ எப்படியானாலும் — மக்களை அதிகமாகக் கவரத்தானே செய்யும்? மேலும் வாக்காளர்களில் பலர் ஜாதி, மதம், மொழி, பிராந்தியம் போன்ற பல அம்சங்களைத்தான் கவனிப்பார்களே தவிர, ஆட்சியில் அதிகாரம் குவிதல், கம்யூனிஸ சித்தாந்தத்துக்கு எதிர்ப்பு போன்ற அம்சங்களை அவ்வளவாகப் பொருட்படுத்த மாட்டார்கள் என்பது ஆரம்பத்திலிருந்தே தெரிந்த கதையாகத்தான் இருந்தது. இந்தச் சூழலில் சுதந்திரக் கட்சியின் செல்வாக்கு எந்த அளவுக்கு இருக்கும்?

இவ்வாறு பல ஐயப்பாடுகள் இருந்த போதிலும் பம்பாயில் நடந்த சுதந்திரக் கட்சியின் முதல் மாநாடு, பல பிரபலமான புள்ளிகள் மட்டுமின்றி, பல கட்சிகளும் கூட சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை ஏற்று அதனுடன் இணையத் தயாராக இருப்பதை உணர்த்தியது. தமிழ்நாட்டைச் சேர்ந்த இந்திய தேசிய ஜனநாயகக் கட்சி, உழைப்பாளர் கட்சி ஆகியன; ஆந்திராவைச் சேர்ந்த கிரிஷ்கர்லோக் கட்சி; பீகாரைச் சேர்ந்த ஜனதா, ஜன காங்கிரஸ் கட்சிகள்; காங்கிரஸிலிருந்து பிளவுபட்டு உ. பி. யில் கிருஷ்ணடட் தலைமையிலும் பஞ்சாபில் உத்தம்சிங் நாகோகி தலைமையிலும் இயங்கி வந்த அணிகள் முதலியன சுதந்திரக் கட்சியுடன் இணைந்தன. இவை எல்லாவற்றையும் விட முக்கியமானதாகக் கருதப்பட்டது, ஒரிஸ்ஸாவின் கண தந்திர பரிஷத் கட்சி இணைந்ததுதான். காரணம், இந்தக் கட்சி அங்கு மிகவும் செல்வாக்குப் பெற்று, அடுத்து காங்கிரஸுக்குப் பதிலாக மாற்று அரசு அமைக்கும் என்று கூட எதிர்பார்க்கப்பட்டது. பரிஷத்தைச் சேர்ந்த பி. கே. தேவ், "எங்கள் கட்சி அதன் தனித்தன்மையை இழக்கிறது என்பது உண்மைதான்; ஆனால், அதே நேரம் அகில இந்தியச் செல்வாக்கை நாங்கள் சுதந்திரக் கட்சி மூலமாகப் பெறுகிறோம். இது தனித்தன்மை இழப்பை ஈடு செய்வதுடன், அதைவிட உயர்ந்த கௌரவத்தை அளிப்பதாகிறது" என்றார். சுதந்திரக் கட்சியுடன் இணைந்த வேறு பல கட்சியினரும் இவ்வாறே எண்ணினர்.

சுதந்திரக் கட்சியில் சேர்ந்த செல்வந்தர்கள், மாஜி மன்னர்கள் பலருள் ஒருவர், தமது அழகினாலும் செல்வாக்கினாலும் மிகப் பிரபலமாகியிருந்த மகாராணி காயத்ரி தேவி. ஆனால் மாஜி மன்னர்களில் பெரும்பாலோர் தங்களுக்கு அளிக்கப்பட்டு வரும் மான்யம் நிறுத்தப்பட்டு விடுமோ என்று அஞ்சி, காங்கிரஸ் பக்கமே தொடர்ந்து இருந்து வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

முன்னாளில் வைஸ்ராயின் செயற்குழுவில் அங்கம் வகித்தவரும், பின்னால் உ. பி. கவர்னராக இருந்தவரும், நாட்டின் மிகப் பெரிய வர்த்தகருமான ஹோமி மோடி, சுதந்திரக் கட்சியின் பொருளாளரானார். சர்தார் பட்டேலின் மகன் தாஹ்யா பாய் பட்டேல் கட்சியில் சேர்ந்தார். இன்னும் குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய சுதந்திரக் கட்சித் தலைவர்கள், ஏ. டி. ஷ்ராஃப், என். ஸி. சட்டர்ஜி, முகமது இமாம், பேராசிரியர் ரத்னசாமி, எச். எம். பட்டேல், டாண்டேகர், லோபோ பிரபு போன்ற ஜொலிக்கும் வைரங்கள்.

ஓர் அயல்நாட்டு நிருபர், "சுதந்திரக் கட்சியின் தலைமை ரொம்ப உயர்வானது; ரொம்பக் கௌரவமானது; அதனை அலட்சியம் செய்வது சாத்தியமேயில்லை" என்று எழுதினார். இன்னோர் அயல்நாட்டுப் பத்திரிகையாளர், "தலைவர்கள் அனைவரும் கௌரவமானவர்களாக இருக்கிறார்களேயொழிய, பிரபலஸ்தர்களாக இல்லை" என்று குறிப்பிட்டார். இந்த இரண்டு கூற்றிலும் உண்மை இருந்தது. ராஜாஜியின் தலைமை கூட, கட்சிக்கு ஓர் உயர் அந்தஸ்தை அளித்ததே தவிர, அதனைப் பிரபலமாக்கவில்லை. அவருடைய அறிவாற்றல் மதிக்கப்பட்டது; கூட்டம் சேர்த்தது. ஆனால் நேருவிடம் இருந்தது போன்ற ஒரு கவர்ச்சி, ஆளை மயக்கும் திறன் ராஜாஜியிடம் இருக்கவில்லை.

(தொடரும்)

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# இன்சுவையின் இனிய பெயர்




உற்சாகமூட்டிடும் நியூட்ரின் மில்க் பிஸ்கெட்டுகள்
இருக்கும் போது ஆனந்தத்திற்குக் குறைவேது!
வீட்டுப் பாடங்கள் கூட இனி ஜோராய் இனிக்கும்.
பால் புரதத்துடன் கூடிய மொறு மொறு
பிஸ்கெட்டுகள். உள்ளங்கவர் மழலைச் செல்வங்கள்
நாளும் சுவைத்து மகிழ்ந்திட.




**பால் நலம்.
சுவை வளம்.**

Mudra:Blr:NB:175:89:TAM